# காய சித்தி

## (திருமந்திரம்)

## அல்லது சாகாக்கலை



**சைவ சித்தாந்தப் பெருமன்றம்,**

4, வெங்கடேச அக்கிரகாரம் தெரு,

(முதல் மாடி)

மயிலாப்பூர், சென்னை – 600 004.

**2001**

உ

திருச்சிற்றம்பலம்

# காயசித்தி

**(திருமந்திரம்)**

அல்லது

**சாகாக் கலை**





ஆக்கியோன் :

*சிவயோகி மா. இரத்தினசபாபதி பிள்ளை*

திருவாரூர்



வெளியிடுவோர் :

சைவ சித்தாந்தப் பெருமன்றம்

4, வெங்கடேச அக்கிரகாரம் சாலை, சென்னை-4

விலை : ரூ. 10.00

| | | |
|---|---|---|
| முதற் பதிப்பு | : | 1968 |
| இரண்டாம் பதிப்பு | : | 1994 |
| மூன்றாம் பதிப்பு | : | 2001 |
| தலைப்பு | : | **காயசித்தி** |
| உரிமை | : | சைவ சித்தாந்தப் பெருமன்றம் |
| தாள் | : | 56gsm |
| பக்கங்கள் | : | 96 |
| படிகள் | : | 1200 |
| விலை | : | ரூ. 10.00 |
| வெளியிட்டோர் | : | **சைவ சித்தாந்தப் பெருமன்றம்**<br>4 (முதல் மாடி)<br>வேங்கடேச அக்கிரகாரம் சாலை,<br>மயிலை, சென்னை – 600 004.<br>போன் : 4935109 |
| அச்சிட்டோர் | : | **ஸ்ரீ கைலாஷ் பிரிண்டர்ஸ்,**<br>32, பங்காரு நாயக்கன் தெரு,<br>மவுண்ட் ரோடு,<br>சென்னை – 2. போன் : 8532906 |

உ

# முன்னுரை

''**காயசித்தி** அல்லது சாகாக்கலை'' என்னும் இந்நூலை திருமந்திரத்தில் மூன்றுந்தந்திரத்தில் 13-ஆம் பகுதியாய் ''காயசித்தி உபாயம்'' என்னும் தலைப்பிலுள்ள 16 பாடல்களின் கருத்தை மிகவிரிவாய் ஆராய்ந்து படிப்போர் உளங் கொளந் கேற்றவகையில் திருவாரூர் சிவயோகி மா. இரத்தின சபாபதிப பிள்ளை அவர்கள் எழுதி உபகரித்தார்கள். இந் நூலைத் தம் சொந்தப் பொறுப்பில் எழுதி வெளியிட்டு அதனை விற்ற வருவாயையும் பெருமன்றத்துக்காக உதவிய அவர் பெருமை நினைந்து போற்றுதற்குரியது. பெருமன்ற 63-ஆம் ஆண்டு விழா திருமயிலாப்பூரில் நிகழ்ந்த போது இந்நூலின் முதற்பதிப்பு 1968-ல் பெருமன்ற வெளியீடாக உலாப் போந்தது. வெளிவந்த சில ஆண்டுகளில் நூல்கள் விலையாகி விட்டன. அப்பால் பல நாடுகளிலிருந்தும் கூட இந்நூலைக் கேட்டுக் கடிதங்கள் வந்தன. இல்லை என்ற பதிலே எழுதப் பட்டது. தற்போது இந்நூல் வெளிவர வேண்டும் எனப் பலர் அக்கரை கொண்டனர். அவர்களுள் பெருமன்றத் துணைத் தலைவர் திரு. C. N. சிங்காரவேலு அவர்களும் பெங்களூர் டாக்டர் திரு. M. குப்புசாமி முதலியார் அவர்களும் தலையிடத்தைப் பெற்றவர். அதனால் பெருமன்ற செயற்குழு இந்நூலை வெளியிட அனுமதியளித்தது. அதனால் தற்போது பெருமன்ற 88-ஆம் ஆண்டு விழாவில் ஆனைமலையில் இந்நூல் வெளிவர இருக்கின்றது. இந்நூல் கிடைக்காது ஏக்கமுற்றோர் பலர் உளர். அவர்கள் யாவரும் விரைவில் இந்நூலை வாங்கிப் பயன்படுத்திக் கொள்வார்களாக. மற்றையோருக்கும் இந் நூல் மூலம் திருமந்திரப் பெருமைப் பற்றி அறிய வாய்ப்பு கிட்டுமாதலின் வாங்கிப்படித்துப் பயனுறுவார்களாக. இந்

நூல் மெய்ப்பு திருத்தியுதவிய சித்தாந்தம் ஆசிரியர் வித்துவான் அம்பை சங்கரனர் அவர்களுக்கும் நன்முறையில் அச்சிட்டுத் தந்த அலமு அச்சகத்தினருக்கும் நன்றி உரிய தாகுக. யாவரும் வாங்கிப் பயன்படுத்தி நலனுறுவார்களாக.

**S. தியாகராஜன்**
தலைவர்,
ஆனைமலை
26—2—94

**சு. பாலசுந்தரம்**
செயலாளர்



திருச்சிற்றம்பலம்

## மூன்றாம் பதிப்பின் முன்னுரை

உடம்பின்றி உயிர்தனித்து நின்று எத்தொழிலையும் செய்ய முடியாது. அறம் முதலிய உறுதிப் பொருள்களை உயிர்கள் பெற வேண்டுமானால் அதற்குரிய முயற்சிகளை உடம்போடு கூடி நின்றே செய்தல் வேண்டும். ஆகவே உயிர்க்கு ஞான சாதனமாகவுள்ள உடம்பினைப் பேணுதல் இன்றியமையாததாகும் என்பதனை திருமூல தேவ நாயனார் திருமந்திரம் மூன்றாம் தந்திரத்தில் காயசித்தி உபாயம் பகுதியில் அருளியுள்ளார். இப்பகுதிக்கு திருவாரூர் சிவயோகி பா. இரத்தினசபாபதி பிள்ளை அவர்கள் யோக நெறியில் நின்று தான் பெற்ற அனுபவ ஞானக் கருத்தை மிக விரிவாய் ஆராய்ந்து படிப்போர் உளங்கொளும் வகையில் எழுதி அவர்கள் பொருட்செலவில் பெருமன்ற 63ஆம் ஆண்டு விழா மாநாட்டில் வெளியிட்டார்கள். அவ்வரிய நூலினை அன்பர்கள் வேண்டுகோளுக்கிணங்க மூன்றாம் பதிப்பாக 95ஆம் ஆண்டு விழா மாநாட்டில் வெளியிடப் பெறுவதில் மிகவும் மகிழ்ச்சியடைகிறோம். இந்நூலை யாவரும் பெற்றுப் பயனடையும்படி வேண்டிக் கேட்டுக் கொள்ளுகின்றோம்.

**எஸ். தியாகராசன்**
தலைவர்
19.5.2001

**புரசை. பாலசுப்பிரமணியம்**
செயலாளர்/ சொற்பொழிவுகள்

**2001**

## பதிப்புரை

காயசித்தி (திருமந்திரம்) அல்லது சாகாக் கலை என்னும் இந்நூல் நம் சைவ சித்தாந்த மகாசமாஜ 63ஆம் ஆண்டு விழா திருமயிலாப்பூரில் நிகழும் இந்நற்காலத்து வெளிவருவது மகிழ்ச்சிக்குரிய செய்தியாகும். "தோத்திரத்தில் சிறந்தது திருவாசகமும்; சாத்திரத்தில் சிறந்தது திருமந்திரமும்" என வடலூர் வள்ளல் தம் அனுபவ வாக்காகக் குறிப்பிடுகின்றார். நாம் பன்னிரு திருமுறையுள் ஒன்ருகக்கொண்டு தோத்திர வரிசையுள் திருமந்திரத்தைக் கருதினுலும் இது சாத்திர நிலையிலும் சிறந்து விளங்கும் பெருமை பெற்றது என்பது பலரும் ஒப்ப முடிந்த உண்மையாகும். திருமந்திரம் யோகக் கலை பற்றி மிகவும் சிறப்பாகக் கூறவல்லது. அதில் பல நுட்பங்கள் உள்ளன. அந்நுட்பத்தைப் பற்றிக் கூறவல்லார் இக்காலத்து மிகவும் அரியர். சிலர் இருப்பினும் அவர்களைப் பயன்படுத்தாது இருப்பது நம் சமய உலகுக்குத் தகுதியன்று. இதை உணர்ந்து அக்குறையைப் போக்க நம் சமாஜம் தக்க பெரியார் ஒருவரைத் தேர்ந்தெடுத்தது. அவர் திருவாரூர் சிவயோகி திருவாளர் இரத்தின சபாபதி பிள்ளையவர்கள் ஆவர்.

அப்பெரியார் தம் வாழ்நாள் முழுவதும் திருமந்திரத்தையும் திருவாசகத்தையுமே படித்து யோக நெறியில் அனுபவ ஞானம் பெற்றவர் ஆவர். "அவர் தாம் கண்ட இன்பம் பெறுக இவ் வையகம்" என்னும் அருள் எண்ணத்தால் தாம் கண்டறிந்த பல உண்மைகளை இந்நூலில் வெளியிட்டுள்ளார். இதன் வெளியீட்டுச் செலவினையும் தாங்களே ஏற்று அதனுல் வரும் வருவாயை சமாஜத்திற்கே அளித்துவிட்ட அவர்கள் பெருந்தகையினை உன்னுந்தோறும் உன்னுந்தோறும் மிக மகிழ்வெய்துகிறோம்.

இதை யாவரும் பெற்று நற்பயன் பெறுவாராக.

**கோ. மு. முத்துசாமி**
தலைவர்
சைவ சித்தாந்த மகாசமாஜம்

திருமயிலை
27–12–68

## அணிந்துரை

காயசித்தி அல்லது சாகாக் கலை என்னும் அரிய நூலை எழுதிக் கொடுத்தவர் பேரன்பர், சிவயோகி, இரத்தின சபாபதி பிள்ளை அவர்கள் ஆவார். சைவத் திருமுறைகளையும் சைவ சித்தாந்த சாத்திரங்களையும் நன்கு அறிந்து அவற்றின் பேருண்மைகளைத் திரட்டி எடுத்தாற்போல் திருமந்திரத்தி லுள்ள காயசித்தியை இந் நூலில் அழகுபெற விரித்துரைத் துள்ளார்கள். இவற்றின் பெருமையெல்லாம் எடுத்துரைக்க என்னுல் இயலாது எனினும் இவர்தம் பேராற்றலை யான் நேரில் கண்டனுபவிக்கும் வாய்ப்பு ஏற்பட்டது. ஆறு மாதங்களுக்கு முன் இவர்கள் என் இல்லத்தில் யான் உள்பட அன்பர்கள் பலருக்கு நல்லுபதேசஞ் செய்தார்கள். அதிற் கலந்து கொண்டவர்களுள் குறிப்பிடத்தக்கவர்கள் 1. அச் சமயம் மின்சார மேற்பார்வைப் பொறியாளராக இருந்தவரும், தற்போது தலைமைப் பொறியாளராக இருக்கும் திரு. A. சுப்பிரமணிய பிள்ளை அவர்கள் 2. திரு. G. M. முத்துசாமி பிள்ளை அவர்கள் I.A.S. (Retired Collector) 3. திரு. கு. அய்யா சுப்பிரமணிய முதலியார் அவர்கள் (தர்மகர்த்தர் குழுத் தலைவர், ஸ்ரீ கபாலீஸ்வரர் தேவஸ்தானம், மயிலாப்பூர்) 4. திரு. M. சிவராமன் இன்னும் பெரியார் பலரும் கலந்து கொண்டார்கள். அரிய அனுபவ உண்மைகள் இதில் அடங்கியுள்ளன. இந்நூலை யாவரும் பெற்றுப் பயனடையும்படி வேண்டிக் கொள்ளுகிறேன்.

**P. G. நடராஜ முதலியார்**
உரிமையாளர்
பார்க்கர் அச்சகம்

திருமயிலை
27-12-68

# அணிந்துரை

மனித உடல் மிகவும் விந்தையானது. இதனைப் பயன்படுத்திக்கொள்ள வேண்டியவண்ணம் பயன் பெற்றுக்கொள்ள அறியாமலே நாம் காலத்தை வீணாக்கி விடுகிறோம். 'அரிது அரிது மானிடராதல் அரிது' என்று நம் மூதாதையர், இந்த உடலின் நுண்மை நிலையை யுணர்ந்து, இதனுள் இருக்கும் கருவிகளை முறைப்படி இயக்கிப் பேரின்பம் துய்த்திருக்கிறார்கள்.

" பொத்தை ஊன் சுவர் புழுப் பொதிந்து உளுத்தசும்
பொழுகிய பொய்க்கூரை
இத்தை மெய்யெனக் கருதிநின்று இடர்க்கடல்
சுழித்தலைப் படுவேனை
முத்து மாமணி மாணிக்க வைரத்த பவழத்தின்
முழுச்சோதி
அத்தன் ஆண்டுதன் அடியரிற் கூட்டிய அதிசயம்
கண்டாமே !

என்று மணிவாசகப் பெருமான் இந் நுண்மையை யுணர்ந்து இறைவனால் ஆட்கொள்ளப்பெற்ற வியத்தகு செய்தியை விளம்புகிறார். மயிர்க்கால் தோறும் தேன் பிலிற்றும் இன்ப உணர்வு பெற்றார். ஆண்டவன் தமக்கு இந்த உணர்வு ஊட்டிய வகையையும் எடுத்தியம்புகிறார்.

" காயத்துள் அமுது ஊறஊறக் கண்டுகொள் "
என்று காட்டினன் என்கிறார்.

இந்த உண்மை உணர்வு நிலையைக் கைவரப் பெற்றவர்கள் என் ஆசிரியப் பெருந்தகையார்



திருமிகு மா. இரத்தின சபாபதி பிள்ளையவர்கள் ஆவார்கள். அவர்களது உணர்வு நெறியைக் 'சாகாக் கலை' என்னும் இந்நூலில் மிக நுட்பமான முறையில் விளக்கியிருக்கிறார்கள். இவ்வுடற் பொறியின் வாயிலாக இந்த இன்ப ஊற்றை நுகரத் தொடங்கி விட்டவர், சாகா நிலை பெற்றவர் ஆவார். பன்னெடுங்காலம் பிணி மூப்பு அணுகா வண்ணம் ஞான இன்ப வாழ்வு வாழவல்லவராவர். அரிதிற் கிடைக்கும் இவ்வுண்மை உணர்வு விளக்க நூலை, மன்பதைக் களிக்கும் ஆசிரியர் திருவடிகட்கு வணக்கம் செலுத்தி, இதனைப் பயன்படுத்தி மேன்மையுற்று சாகா நிலை எய்த வேண்டுமென ஞானஇன்ப நாட்ட முடைய நல்லோரைக் கேட்டுக் கொள்ளுகிறேன்

**கி. இராமலிங்கம்**
'தமிழ் மழை' சென்னை-30

29-12-68

# காயசித்தி அல்லது சாகாக்கலை

மக்கள் பல்லாயிரம் ஆண்டுகள் வாழ்ந்து வந்ததாகப் பண்டைய நூல்களில் காண்கிறோம். சிரஞ்சீவிகளாகவே சிலர் உள்ளதாகப் புராணங்கள் கூறுகின்றன. நம் நாட்டுச் சித்தர்கள் மக்கள்பால் இரக்கங்கொண்டு நெடுநாள் வாழ வழியும் கண்டுபிடித்து அதைப் பின்பற்றி நூல்களில் சொல்லியுள்ளார்கள். அப்படி நெடுநாள் வாழாவிட்டாலும் உண்மையை அறிந்துகொண்டால் நோயற்றுவது நாம் வாழக் கூடும். நிலஉலகில் சிறந்தமுறையில் மக்கள் வாழ்வதே முதல் நிலை. பின்னரே காணப்படாத கடவுளைப்பற்றியும் கடவுளாராய்ச்சியும் அனுபவமும் பற்றியும் அமையவேண்டும். தம்மைப்பற்றி உண்மையைக் கண்டவிடத்தில்தான் கடவுளும் இருந்து இயக்குவதை மக்கள் உணரமுடியும். உயிரை இயக்கு பவனும் கூத்தன். உயிரை இயங்காமல் நிறுத்திவிடுபவனும் கூத்தனே தான். இந்த இருநிலைகளும் மனிதனிடம் நிலை பெற்றுள்ளன. மரணத்தின்போது உயிர் உடலினைவிட்டுப் பிரிந்துவிடுகிறது. அதைப்பற்றியே இங்கு சொல்லவில்லை. உயிர் உடலில் உள்ள போது "கேவலகும்பகம்" என்ற ஒரு நிலை அருளாளர்க்குக் கிட்டுவது. அப்படி அமையும்போது கடவுள் நிலையில் மனிதன் தன்னை உயர்த்தி ஒன்றுபடுகிறன். கீழான இந்திரிய வயப்பட்டு அழியும் உடலைவிட்டு, அதனின்று



வேறுபட்ட தான ஒரு ஒளிநிலையில் தன்னைக் காண்கின்றன். வேறு சொற்களால் சொல்லுமிடத்து மனிதன் கீழ்த்துருவக் கவர்ச்சியினின்றும் விடுபட்டு மேல்துருவத்தில் நிற்றல் என்பதாகும். சிரசுக்குமேல் உள்ள மேல்துருவத்தில் கவனம் சென்றபோது மூச்சின் இயக்கம் குறைந்தோ சுத்தமாக நின்றே போய்விடும். இந்த இயக்கத்தைத் தில்லை என்ற சிதம்பரத்தல அமைப்பில் காட்டியுள்ளார்கள். காண வேண்டியது அஞ்ஞானத்தோடு உள்ள நமது உடலில் ஞானத்தினுல் ஞானத்தைக் காணவேண்டியதாக உள்ளது. சிதம்பரம் சென்று கண்டால் முத்தி சித்தித்துவிடும் என்பது உலகினர் கோட்பாடு. ஞானிகள் அத்தகைய நிலையைத் தங்கள் உடலினிடமே கண்டார்கள்.

ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுட்புக்
கூனை யிருளற நோக்கும் ஒருவற்கு
வானக மேற வழியெளி தாமே.

**திருமந்திரம்—2316**

ஆடிய காலில் அசைக்கின்ற வாயுவுந்
தாடித் தெழுந்த தமருக ஓசையும்
பாடி யெழுகின்ற வேதா கமங்களும்
நாடியி னுள்ளாக நான்கண்ட வாறே. 2317

மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கீழ்க்காட்டிப்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலக் காதனுங் கூத்தொழிந் தானே. 818

சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தான்
மத்தியா னத்திலே வாத்தியங் கேட்கலாங்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படுஞ்
சத்தியஞ் சொன்னேஞ் சதாநந்தி ஆணையே. 730

கீழ்த்துருவ நோக்கம் உள்ளவரையில் சுவாசகதி நடந்து கொண்டேயிருக்கும். மேல்துருவத்தில் மனம் பதிந்தபோது கீழ்த்துருவத்தின் கவர்ச்சியைத் தாண்டிவிடுகிறபடியால் உடலின் இயல்பான மூச்சும் மெத்தென ஓடியோ இறுதியில் இல்லாமலோ நின்றுவிடும். மூச்சை அசைத்துக்கொண்டிருக் கும் கூத்தனும் அசைத்தலை நிறுத்திவிடுவான். திருமந்திரம் மூன்றுந் தந்திரம் கலைநிலை பார்க்க இது விளங்கும்.

தானே எழுந்தஅத் தத்துவ நாயகி
ஊனே வழிசெய்தெம் உள்ளே யிருந்திடும்
வானோர் உலகீன்ற அம்மை மதித்திடத்
தேனே பருகிச் சிவாலய மாகுமே. 719

திகழும் படியே செறிதரு வாயு
அழியும் படியை அறிகில ராரும்
அழியும் படியை அறிந்தபின் நந்தி
திகழ்கின்ற வாயுவைச் சேர்தலு மாமே. 720

சோதனை தன்னில் துரிசறக் காணலாம்
நாதனும் நாயகி தன்னிற் பிரியுநாள்
சாதன மாகுங் குருவை வழிபட்டு
மாதன மாக மதித்துக்கொள் ளீரே. 721

ஈராறு கால்கொண் டெழுந்த புரவியைப்
பேராமற் கட்டிப் பெரிதுண்ண வல்லீரேல்
நீரா யிரமும் நிலமா யிரத்தாண்டும்
பேராது காயம் பிரான்நந்தி ஆணையே. 722

இவற்றின் சாரத்தை ஆராய்வோம்.

மேல்துருவம் அந்தக்கரணத்தை இடமாகக் கொண்டது. கீழ்த்துருவம் அந்தக்கரணத்தையும் இந்திரிய நிலைகளையும்



இடமாகக் கொண்டது. அந்தக்கரணத்தை இந்திரியங்களின் வேருகப் பிரிக்கும் உபாயத்தில் யோகம் உள்ளது. அந்தக் கரணம் உலகநிலையை அணுகில் இந்திரியங்கள் தொழிற் படும். உலக நிலையில் அணுகாதபோது இந்திரியங்கள் தொழிற்படாது போகும். மனிதன் இயல்பாக புறநிலையில் இன்பம் இருப்பதாக உலகத்தின் கவர்ச்சியில் ஈடுபட்டு இழுக் கப்பட்ட கீழ்த்துருவ நிலையில் பற்றுக்கொண்டே பல பிறவி களில் வாழ்ந்து மரணத்தை அடைந்து அடைந்து வந்துள் ளான். ஆசைகள் நிறைவேறுவதால் அவற்றில் வெறுப் படைந்து மீண்டும் அவை வேண்டியதில்லையென்றும் அமைந் திருக்கலாம். கிட்டாதபோது ஆசை அதிகமாக அமைந்து சூழ்நிலை சாதகமாக இல்லாமல் ஏக்கத்துடனும் வந்திருக் கலாம். இந்த இருநிலை காரணமாக நியதி இழுப்பு சக்தியை அமைக்கிறது. கீழ்த்துருவம் குணங்கள் விளக்கமான நிலையில் உருவத்தை அநுசரித்து நடப்பது. மேல்துருவம் அறிவுநிலையில் உள்ளது. அறிவுநிலை உருவத்தை அநுசரித்தால் பிறவியுண்டு. உலகப் பொருளாயினும் சரி வடிவுடைய ஒரு கடவுள் வடிவா யினும் சரி உருவத்தில் இரண்டுக்கும் பேதம் உடையதுதான். எத்தகைய வடிவும் எல்லாக் குணங்களையும் ஒருசேரப் பெறவில்லை. ஒரு பொருள் பிறிதொரு பொருளில் வேறு பட்டது என்றது பிரகிருதி நியாயம். தெய்வத்திற்கும் அம் முறையில் வடிவு கொடுத்தபோது எண்ணநிலையில் வேறுபட்ட தத்துவ உணர்ச்சிகள் உண்டாகும். அதனுல் போகபோக் கியத்திற்கு உரிய ஆற்றல் அறிவுநிலையிலும் செயல்நிலையிலும் பொருந்தி உபகாரம் செய்து பிறவிக்கே வரச்செய்யும். அதனுல் திரும்பத் திரும்ப ஆற்றலை அடையவும் பொருளை அடையவும் ஆசை தூண்டிக்கொண்டேதான் இருப்பது இயல் பாக உள்ளது. இப்படியே நிலை ஏற்பட்டால் முடிவே இல்லாத நிலைதான் அமையும்.

ஆசை யறுமின்கள் ஆசையறு மின்கள்
ஈசனோ டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசை படப்பட ஆய்வருந் துன்பங்கள்
ஆசை விடவிட ஆனந்த மாமே. **2615**

உருவ வழிபாடு பக்தன் நிலைமை. அவன் எண்ணமெல்லாம் நல்ல சூழ்நிலை அமையவேண்டும் என்பதேதான். அவா வறுத்தல்பற்றி எட்டாம் தந்திரத்தைப் பார்த்தால் இது நன்கு விளங்கும். பக்தன் அவன் விரும்பிய உருவை எண்ணி எண்ணி நினைந்து நினைந்துதான் அந்த ஆற்றலைப் பெற்றான். எண்ணத்தின் அடிப்படை உலகம்; அதற்குத் துணை கடவுள் என்ற வகையில் இரு துருவங்களும் செயல்பட்டுக்கொண்டே இருக்கின்றன. எல்லா உருவங்களும் மனத்தினால் பார்த்து கருத்தினால் நினைவில் பதியவைத்ததேதான். நினைந்து நினைந்து வெறுப்புணர்ச்சியைப் பெருக்கவும் செய்கிறான். காதல் உணர்ச்சியையும் செய்கிறான். நினைவை எப்படி விடுவது என்ற அடிப்படையில் சமயவாதிகள் மதத்தை நிலைநாட்டினார்கள்.

இங்கு எடுத்துக்கொண்ட பொருள் சமய தர்க்க வாத மன்று. எல்லாச் சமயங்களில் உள்ள மேம்பட்ட கருத்துக்கள் நன்மையைத் தருவனவேதான். மேலான நிலையில் உள்ள அகண்டாகாரத்தை அறியும் முறையில் தொடக்க நிலையில் வேறுபட்டதால் வேற்றுமையாகவே விளங்கும். சைவம் காட்டும் முறையில் தொடக்கம் இங்கு உண்மையைக் காண்போமாக. **கண்ணுதல்** என்றபோது பலவாகிய தேவரைக் குறிக்காது சிவத்தின் ஆற்றலைக் கொண்ட மூர்த்திக்கே பொருத்தினார்கள். மற்றத் தேவர்களுக்கோ, மனிதர்களுக்கோ மிருகங்களுக்கோ இது இல்லை எனச் சொல்ல இயலாது இருக்கிறது. வியாபகத் தன்மையில் வேறுபட்டது. அறிவு என்பது ஞானேந்திரியங்களோடு பொருந்தியே உலக



ஞானத்தைப் பெறுகிறது. ஐந்து வாயிலாலும் அறிவதை ஒருசேர அறியவும் அவற்றை நினைவில் வைக்கவும் உள்ள ஒரு அறிவு நிலை இந்திரியங்களுக்குப் புறம்பாகவும் இந்திரியங்களோடு பொருந்தியும் உள்ளது. அந்த அறிவு நிலை புருவ மத்தியில் இடங்கொண்டுள்ளது. காண்பது கண். கருத்தில் கொள்வது நெற்றிக் கண். இது புறத்தில் தெரியவில்லை. இரண்டு காதுகளில் கேட்கும் அறிவு. இரண்டு கண்களில் பார்க்கும் அறிவு, மூக்கினால் மணம் உணரும் அறிவு, நாக்கினால் சுவைக்கும் அறிவு எல்லாம் ஒரு இடத்தில் சேருகின்றன. சேரும் இடத்தில் அறிவு உள்ளது. அதுவே நெற்றிக் கண். அதன் பீடம் **உமிழ்நீர் விழுங்கும் இடத்தின் முன்னே உள்ளது.** அது ஆகாயக் கூறானபடியால் புறக்கண்ணுக்குப் புலப்படவில்லை. காணும் உலகையும் அந்தக் கண் காணும். கண்ணால் காணுதலையும் கருத்தால் காணும். கருத்து என்பது மனத்தின் தொழிலேதான். அந்தக்கரணத்தில் மனத்துக்கும் இங்குதான் இடம்.

கர்மேந்திரியம் ஐந்து ஞானேந்திரியம் ஐந்து மனம் ஒன்று ஆகிய இவையே ஏகாதச உருத்திரர்கள்.

கண் அறிவு, காதறிவு, மூக்கறிவு, சுவை அறிவு புறநிலைகளிலிருந்து அந்த இடத்துக்கு எப்படிச் செல்கிறது? பொறிகளுக்கும் பீடத்திற்கும் எப்படி மின்சாரம் கம்பியின் ஊடே பாய்கின்றதோ அதுபோல ஒரு அசைவு வழியாகச் செய்திகள் போக்குவரத்து நடந்து வருகிறது. அதை **நாதம்** என்ற பேரால் கூறுகின்றனர். ஆங்கிலத்தில் (Vibration) என்று பெயர். எல்லா ஞானேந்திரியங்களுக்கும் அங்குத் தொடர்பிருந்தாலும் சென்று பற்றும் தன்மைக்கு விசேஷ மதிப்புக் கொடுத்து அதற்கு இரு கண்களுக்கும் இடையில் உள்ள ஆக்ஞாசக்கிரத்துக்கும் உள் பீடத்திற்கும் ஒரு தொடர்பு

உள்ளது. இதை ஆக்ஞாசக்கிரம் என்றும் முன்னே சொன்ன பீடத்தை மாகேஸ்வரி பீடம் என்றும், ஆங்கிலத்தில் (Pituatary Gland) என்றும் சொல்லப்படும்.

மாறுதலோடு கூடிய உடலில் பெறும் போக போக்கிய எண்ணங்களும் அவைகளால் ஆய வாசனு ரூபங்களும் இங்கேயேதான் இடம்பெறுகின்றன. தியானப் பொருள் உருவம் ஆனுலும் இங்குதான், உருவமில்லாத அருவமானு லும் இங்குதான். இந்தக் காரணங்களால் தியானத்திற்கு முதல் தொடக்க நிலை இங்குதான் ஆரம்பிக்கின்றது. உருத்திரனுக்கு விருபாட்சன் என்று வேறு ஒருபெயர் உண்டு. உருவம் சரிவர இல்லாதது இதனின் வேறுபட்டது என்பதை விருபம் என்கிறோம். அது போலவே அவனுடைய நெற்றிக் கண் வேறுபட்டதாக உள்ளபடியால் விருபாட்சன் என்ற பெயர் வந்தது. பிறவிக்குக் காரணமான காரண சரீரமும் இந்தப் பீடத்தில் பொருந்தியுள்ளது.

'' கண்ணுக்கு மூக்குச் செவிஞானக் கூட்டத்துட்
பண்ணுக்கி நின்ற பழம்பொருள் ஒன்றுண்டு
அண்ணுக்கின் உள்ளே அகண்ட ஒளிகாட்டிப்
புண்ணுக்கி நம்மைப் பிழைப்பித்த வாறே '' 599

அவதாரமெடுத்தவர்கள் எல்லோரும் கோயிலில் உள்ள மூர்த்திகளும், புராணங்களில் வரும் எல்லா உருவங்களும் யாராலாவது படைக்கப்பட்டவையே. ஒருவராலும் படைக் கப் படாதது **பிர்மம், அல்லது சிவம்தான்.** எல்லா உருவங் களுக்கும் சிவம்தான் ஆதாரம்-சிவத்திற்குத் தனக்குத்தானே தான் ஆதாரமாயும் ஆதேயமாகவும் உள்ளது. இந்த உலகில் எல்லா உருவங்களும் இந்தப் பேருருவில் தோன்றி இருந்து அழிந்து விடுகின்றன. சூக்குமமாயும் இங்கேயேதான் உள்ளது. இதனுல் ஞானிகள் காணும் அண்டாகாரம்



வேறு-பக்தன் காணும் உருவ மூர்த்தி வேறு. சைவத்தில் அகண்டாகாரமான இயல்பான நிலைமையைச் சிவம் என்று கொண்டனர். பக்தன் தன் வசதிக்காக வடித்த பிடித்த ஒருருவைச் சிவம் என்றே கருதுகிறுன். இந்தக் குழப்பத்துக் குள்ள வார்த்தையிலும் எல்லாம் சிவமாயிற்று. ஞானி இவ் விதம் வேறுபட்ட உலகத்திலும் ஒரு அகண்டாகார ஒற்றுமை யைக் காண்கிறுன். இந்தக் குழப்பத்தை நீக்க திருமூலர் சிவத்தைப் **பண்ணுத பொருள்** என்கிறுர். பண்ணப்பட்ட பொருள்களிலெல்லாம் பண்ணுத பொருள் கலந்தே உள்ளது. அது கலவாத ஒரு தனி நிலையும் உண்டு. அந்தத் தனி நிலையை அடைய வேறுபட்ட நிலையிலிருந்து மாறவேண்டும். இரண்டு கண் பார்வையில் காணப்பட்ட பிரபஞ்சம் உள்ளது. பார்வை புறத்தில் செல்லுவதை விடுத்து அகநோக்கு பெற்றபோது புறஉலகம் கண்ணில் அமையவில்லை. பண்ணுத சிவத்தை நினைக்க பண்ணப்பட்ட உலகம் இல்லை. உலகத்தை விட வேண்டுமென்றுல் அகண்டம் மனதில் இடம் பெறவேண்டும். அகண்டமான சிவம் அகண்டமான ஆகாயத்தில்தான் இடம் பெறுவர்.

ஒண்ணு நயனத்தில் உள்ற ஒளிதன்னைக்
கண்ணுரைப் பார்த்துக் கலந்தங் கிருந்திடில்
விண்ணுறு வந்து வெளிகண் டிடவோடிப்
பண்ணுமல் நின்றது பார்க்கலு மாமே. 600

**குறிப்பு :** ஒண்ணு நயனம் - பொருள்களில் சென்று பற்றுத ஒரு நிலைப்பட்ட கண்.

பண்ணுத பொருள் ஆகாயமேதான்-ஆகாயமேதான் சுயம்பு மூர்த்தி-மற்றவற்றைச் சுயம்பு மூர்த்தி என்பது உபசார வழக்கு.

மேலே காட்டிய காரணத்தால் வியக்தமான உருவத்திற்கும் வியக்தமில்லாத அறிவு மயமான சிவத்திற்கும் கலந்த ஒரு உருவத்தை அருஉருவத் திருமேனி என்ற சத்தியுடன் கூடிய ஒரு மூர்த்தியை அருவத்திற்கும் உருவத்திற்கும் இடையில் கொண்டனர். அவர் பெயர் சதாசிவர் - சத்தி உருவம்; சிவம்-அறிவு. எப்படி சிவம் பண்ணப்படாததோ அப்படியே உயிரும் பண்ணப்படாததுதான். பண்ணப்பட்ட உடலில் தங்கி மயங்கி உள்ளது. உடல்தானன்று என்ற எண்ணம் முதலில் உதிக்கவேண்டும். உடலில் எப்படி உயிர் உள்ளதோ அதுபோல உயிரில் சிவம் உள்ளது. உயிரையே நினைத்த போது உடமபு இல்லை. அதுபோல அகண்டமான சிவத்தை நினைத்தபோது வேறுகண்டமாக மனம் இல்லை. உடம்பை விட்டு ஆகாயத்தானத்தில் மனம் பதிவுண்டு சிவத்தைப்பற்றி நினைத்தபோது உண்மையான சந்திரமண்டலம் தோன்றிவிடும். சந்திரமண்டலம் தோளுக்குமேல் வியாபகம். அதன் சூக்குமநிலை நெற்றி நடுவிலிருந்து பிர்மரந்திரமும் அதன் மேலும் உள்ளது. பிர்மரந்திரம்வரைதான் சதாசிவர் தொழிற்படும் நிலை.

ஒருபொழு துன்னுர் உடலோ டுயிரை
ஒருபொழு துன்னுர் உயிருட் சிவனை
ஒருபொழு துன்னுர் சிவனுறை சிந்தையை
ஒருபொழு துன்னுர் சந்திரப் பூவே. 603

சந்திரப்பூவு-நெற்றி நடுத்தானம்.

**கண்ணால் செய்யும் சாதனமே சிவத்தை அடைய வழி**

எண்ணு யிரத்தாண்டு யோகம் இருக்கினும்
கண்ணுர் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடிக்கு உள்ளே ஒளிபெற நோக்கினுற்
கண்ணுடி போலக் கலந்துநின் றுனே.

**திருமந்திரம்—603**



சிந்தனைநின் தனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே

**26. திருச்சதகம்...திருவாசகம்**

ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப் பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் ருெடர்மின் விடேன்மின்
பற்றுமி னென்றவர் பற்றுமுற் ருெளித்தும்
**தன்னே ரில்லோன் ருனேயான தன்மை**

**திருவாசகம்—திருவண்டப் பகுதி**

நாட்டம் இரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
வாட்டமும் இல்லை மனைக்கும் அழிவில்லை
ஓட்டமும் இல்லை உணர்வில்லைத் தானில்லை
தேட்டமும் இல்லை **சிவனவ னுமே.** 604

நயனம் இரண்டும் நாசிமேல் வைத்திட்
டுயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லைத் தானே. 605

இந்தத் துருவநிலை அறிவை அறிந்தபின்தான் கலை நிலையிலுள்ள பொருள்கள் விளங்கும்.

**நெற்றிக்கண் என்பது வேறு, புருவநடு என்பது வேறு**
புருவநடு மாகேசரர் என்ற சிறப்பான உருவநிலை பொருந்து
இடம். நெற்றிக்கண் என்பது நெற்றிநடு உள்ளிருப்பது. இ
உருவ அருவமூர்த்தி ஸ்தானம். இங்கிருந்து பிர்மரந்திர
வரையில் உள்ளது. சதாசிவர் ஆக்ஞியாகும்.

கண்ணுதல் என்ற சொல் நெற்றி நடுவிடத்தை
குறிப்பது. அத்தகைய இடத்திற்கு உரியஉருவ அருவமான
சதாசிவத்தை விரும்பிக் கண்களைப் பொருத்தும் வகையை
அறிந்துபார்த்தால் இருளான வெளியில் ஒளியான ஆகாய
கங்கை பாயும். அதையே வழியாகக் கொண்டு கரண
களைப் புறத்தே செல்லாது காத்துக்கொண்டால் சந்திரகலை
பதினாறையும் காத்துக்கொள்ளலாம்.

சந்திரகலை 16 விபரம்.

1. அகரம் (மேதை) — கண்டத்திற்குக் கீழே
2. உகாரம் (அர்க்கீசம்)
3. மகாரம் (விஷம்)
4. விந்து
5. அர்த்தசந்திரன் — இதுவே சிவயோக நிலை
6. நிரோதினி — சதாசிவநிலை
7. நாதம்
8. நாதாந்தம்
9. சத்தி
10. வியாபினி
11. வியோமரூபினி
12. அநந்தை — சிரசின்மேல் உள்ள கலைகள்
13. அநாதை — (நிராதார கலைகள்)
14. அநாசிருதை
15. சமனை
16. உன்மனை



பிராணவாயுவையும் புறம்போகாது காக்கவுமாகும்.
கருத்தை அங்கே நிலைபெறச் செய்யவும் சாதகன் இந்த
முறையைக் கையாண்டால் காற்றில்லாதவிடத்தில் தீபம்
எரிவதுபோல் மனமும் ஒடுங்கும், பிராணனும் ஒடுங்கும்.
இதுவே மனிதன் சம்சாரமான பிரபஞ்சத்தைக் கடக்கும்
உபாயமாகும்.

இந்தச் சாதனையே மாபெரும் யோகமாகும். சகஸ்ர
தளத்தை நோக்கி இந்த அறிவைச் செலுத்தினால் இதுவே
உன்னை மாற்றிப் படைக்கும் சக்தியாகும். இந்த அறிவு
உன்னிடமேதான் உள்ளது. இதனால் மூன்று நிலைகள்
அமைகின்றன.

1. வெளிப்பார்வை குறைந்து அகநோக்கு நிலை பெறும்.
2. சகஸ்ரதளம் முற்றிலும் பரவும்.
3. சிவமாகிய பேரொளிக்குள் நீயும் ஒரு ஒளி என்பதைக் காண்பாய்.

இங்கு தொழிற்பட ஆரம்பிப்பது மகாமாயை சுத்த
வித்தை குண்டலினி என்ற பெயருடைய தத்துவநாயகி
ஆகும். இவள் உடம்புக்குள்ளேயே அவளுக்கு உரித்தான
பாதையை உண்டாக்கிக்கொண்டு சிறப்படைவாள். இவள்
தான் தேவ உலகம் என்ற ஒளிமண்டலத்தைப் படைத்தவள்.
இவள் அமுதமயமான ஒளியைத் திரட்டி சிவனுறையும்
ஆலயத்தைப் படைப்பாள்.

இந்தத் தத்துவ நாயகியும் ஆராலும் படைக்கப்படாத
சத்தி. அவள் விருப்பமே உலகம். அவளே வந்து ஆட்
கொள்ள வேண்டும் என்பதை ''தானே எழுந்த தத்துவ
நாயகி'' என்றார்.

உடலறிவு பிராணவாயு வியாபகத்திஞல் அமைந்துள்ளது. உடலறிவு மாற்றிப் படைக்கவேண்டிய அறிவை யாரும் அறியவில்லை. பிராணனை லயம் செய்யும் நிலையை அறிந்தவர்களிடம் சிவம் பிரகாசித்து விளங்கும். 720

நான் சொல்வது நம்பிக்கைக்கு அன்று. யாரும் சோதித்துப் பார்க்கலாம். சிவத்திற்கு உடல் சம்பந்தப்பட்ட அதோமுகசத்தி ஒன்று. உயிர் சம்பந்தப்பட்ட சித்சத்தி ஒன்று. உடலின் வியாபக எல்லை சதாசிவத்தில் முடிவுறும். அந்த எல்லையை அறிவு தாண்டியபோது சதாசிவ சத்தி தனது உடல் வியாபகத்தை விட்டுவிடும். அதாவது அதோமுகசத்தியின் இழுவைச் சத்தியை விட்டபோது வியாபகமான சிவம் தன்னுடைய சித்சத்தியுடன் பிரகாசிக்கும். இதை உணர்ந்த குருவின்பால் கேட்டறிக.
721

பன்னிரண்டு கால்களையுடைய பிராணன் என்ற பேருடைய வாயுவை இயங்கவொட்டாமல் செய்து ஒளி மண்டலத்திலிருப்பீர்களாகில் உங்களுடைய உடல்கள் தண்ணீராலும் மண்ணாலும் ஆயிரக்கணக்கான வருஷங்களாலும் அழிக்க முடியாது. 722

இதுகாறும் திருமூலர் திருமந்திரத்தின் வழி சிவயோகம் விளக்கி மனிதன் சாகாமல் இருக்கும் கலைகளின் அறிவு விளக்கப்பட்டது.

மற்ற, பெரியார்களுக்கும் இந்நெறி உடன்பாடேதான் என்பதைச் சில ஆராய்வோம்.

திருவள்ளுவர் துறவு என்ற தலைப்பை அறத்துப் பாலில் 35ஆவது அதிகாரமாக வைத்துள்ளார். மூன்ரும் அதிகாரமாக நீத்தார் பெருமையை வைத்தார். அடுத்தாற்போல் நான்காமதிகாரமாக இல்வாழ்க்கையை வைத்துள்ளார். இவர்





துறவு பூண்டவர்களை இந்த நீத்தார் பெருமையில் சொல்லவில்லை. நல்ல முறைமையில் இல்வாழ்க்கை வாழ்ந்து உலகத்தினின்றும் உயர்நிலையை அடைந்தவர்களையே இங்குக் கொள்ள வேண்டியுள்ளது. இவர் பிறப்பறுப்பார்க்கு உடம்பு மிகை என்றறுதியிட்டவர். உடம்பைப் பேணும் மருந்தையும் ஒரு அதிகாரத்தில் வைத்துள்ளார். உயிர் தனது லக்ஷியத்தை அடைய உடம்பு பாதுகாக்கப்படவேண்டும் என்பது இவர் குறிக்கோள் என்பதில் சிறிதும் சந்தேகமில்லை. சிவத்தை அடைய இல்லறமே சிறந்தது என்ற கொள்கையையும் இவர் வலியுறுத்துகின்ருர்.

அறத்தாற்றி னில்வாழ்க்கை யாற்றிற் புறத்தாற்றிற்
போஒய்ப் பெறுவ தெவன்

இயல்பினு னில்வாழ்க்கை வாழ்பவ னென்பான்
முயல்வாரு ளெல்லாந் தலை

அறனெனப் பட்டதே யில்வாழ்க்கை அஃதும்
பிறன்பழிப்ப தில்லாயின் நன்று

வையத்துள் வாழ்வாங்கு வாழ்பவன் வானுறையும்
தெய்வத்துள் வைக்கப் படும்.

மனிதன் இல்வாழ்க்கையில் சிறந்த முறையில் வாழ்ந்து பிறர்க்கு வழிகாட்டுபவன் வானத்தில் அழியாத தேவர் கூட்டத்தினரோடு வைக்கப்படுந் தகுதிபெறுகின்ருன் என்ருர் வாழ்வாங்கு வாழ்பவன். நல்ல சம்பத்து நற்குண மனைவி, நன்மக்கட்பேறு, சிறந்த நண்பர்களோடு வாழ்ந்து, நீண்ட நாளிருந்து இறப்பவனே தேவர் கூட்டத்தில் சேர்க்கப் படுவான் என்ருல் சிவயோகியாயிருந்து உடலை நீட்டித்து சிவமேயான திருமேனி எம்முறையில் மதிப்பு உள்ளது என்பதை யூகித்துக் கொள்க.

சாவதற்கும் பிறப்பதற்கும் காரணமாயுள்ளது இந்திரிய வயப்பட்ட மனம். அத்தகைய மனத்தைச் சிவத்துடன் பொருத்தினபோது மரணத்தை வென்றவனுகின்ருன். எடுத்த பிறவியை மாற்றிப் படைத்தால் பிணி மூப்பு இவை அணுகாது என்கிருர். சித்தம் சிவசிந்தனையாற் சிவமாயிற்று என்கிருர். **சிவமானோர் உடல் வீழ்வதில்லை.** இறப்பு என்பது அவர்கள் விருப்பத்தில் உள்ளது. அவர்கள் ஒளிமயமான தேக மாய்விடுவர். கண்டபத்து கோயில் திருவிருத்தம் பார்க்க.

''சித்தமல மறுவித்துச் சிவமாக்கி எனையாண்ட
அத்தன்எனக் கருளியவா ருர்பெறுவா ரச்சோவே''

''கண்முதற் புலனுற் காட்சியு மில்லோன்
விண்முதற் பூதம் வெளிப்பட வகுத்தோன்
பூவி ஞற்றம் போன்றுயர்ந் தெங்கும்
ஒழிவற நிறைந்த மேவிய பெருமை
இன்றெனக் கெளிவந்தருளி
அழிதரும் ஆக்கை யொழியச்செய்த வொண்பொருள்
இன்றெனக் கெளிவந் திருந்தனன் போற்றி
அளிதரும் ஆக்கை செய்தோன் போற்றி
ஊற்றிருந்து உள்ளம் களிப்போன் போற்றி''

என்ருர்.

''குரம்பைகொண் டின்றேன் பாய்த்தி நிரம்பிய
அற்புத மான அமுத தாரைகள்
எற்புத் துளைதொறு மேற்றின னுருகுவ
துள்ளங் கொண்டோ ருருச்செய் தாங்கெனக்
கள்ளூ ருக்கை யமைத்தன னெள்ளிய
கன்னற் கனிதேர் களிறெனக் கடைமுறை



என்னையு மிருப்ப தாக்கின னென்னிற்
கருணை வான்தேன் கலக்க
அருளொடு பராவமு தாக்கினன்
பிரமன்மா லறியாப் பெற்றி யோனே.''

**திருவண்டப் பகுதி**

''திகழத் திகழும் அடியும் முடியும்
காண்பான் கீழ்மேல் அயனும் மாலும்
அகழப் பறந்துங் காண மாட்டா
அம்மான் இம்மா நில முழுதும்
நிகழப் பணிகொண் டென்னை ஆட்கொண்
டாவா என்ற நீர்மை யெல்லாம்
புகழப் பெறுவ தென்றுகொல் லோஎன்
பொல்லா மணியைப் புணர்ந்தே.''

**திருவாசகம்**

இன்னும் பிறவும் காண்க.

சுந்தரர் அவருடைய 20 வயதுக்குள் இரு மனைவியருடன் வாழ்ந்தும் சிவப்பேறு பெற்றதை உலகமறியும், இப்படி ஒருவ ரில்லாவிடில் துறவையே வற்புறுத்திக் கொண்டிருப்பர்.

யோகமவ் விந்து ஒழியா வகைபுணர்ந்
தாகம் இரண்டுங் கலந்தாலு மாங்குருப்
போகஞ் சிவபோகம் போகிநற் போகமா
மோகங் கெடமுயங் கார்மூடர் மாதர்க்கே. 1960

யோகமும் போகமும் யோகியர்க் காகுமால்
யோகஞ் சிவரூபம் உற்றிடும் உள்ளத்தோர்
போகம் புவியிற் புருடார்த்த சித்திய
தாகும் இரண்டும் அழியாத யோகிக்கே. 1491

என்ற யோக தத்துவத்தை நிரூபித்துச் சென்ருர்.

அண்மையில் ஒரு நூற்ருண்டு காலத்தில் வாழ்ந்த இராமலிங்கப் பெரியார் இத்தகைய யோகத்தைப் பெரிதும் வற்புறுத்திஞர். உலக மக்கள் அவருடைய வார்த்தைகளின் உண்மையறியாது பயனடையவில்லை. உலகுக்குப் பயந்தே அவர் ஒதுங்கினர்.

**சிவவாக்கியர்**

உருத்தரித்த நாடியில்
　　ஒடுங்குகின்ற வாயுவை
கருத்திஞல் இருத்தியே
　　கபாலமேற்ற வல்லீரேல்
விருத்தரும் பாலராவர்
　　மேனியும் சிவந்திடும்
அருள் தரித்த நாதர்பாதம்
　　அம்மை பாதம் உண்மையே.

மூலமாங் குளத்தினில்
　　முளைத்தெழுந்த கோரையை
காலமே எழுந்திருந்து
　　நாலுகட்டு அறுப்பிரேல்
பால ஞகி வாழலாம்
　　பரப் பிர்ம மாகலாம்
ஆலமுண்ட கண்டர் பாதம்
　　அம்மை பாதம் உண்மையே.

மூலநாடி தம்முளே
　　முளைத்து எழுந்த வாயுவை
நாளு நாளு மும்முளே
　　நடு விருத்த வல்லிரேல்



பால ஞகும் உம்உடல்
　　பறந்து போக லாய்விடும்
ஆலமுண்ட கண்டர் பாதம்
　　அம்மை பாதம் உண்மையே.

**திருமூலர் ஞானம்**

தொகுப்பதுதான் மற்றை நூல்கள் கல்வி நூல்கள்
சொல்லிய தத்துவங்கள் தன்னை யெல்லாம்
வகுத்துடனே யிதையெல்லாங் கண்டு நீங்கி
வாகான உடலுயிரை வரையாற் கண்டு
அத்தனுர் வடிவ மென்றே அறிந்துகொண்டு
பகலிரவு அற்றஇடத்தே கருத்தை வைத்து
சீவனையும் சிவந்தனையும் ஒன்ருய்த் தானே
திருமூலர் பாதமென்றே திடமாய்க் காணே.

**ஔவைப் பிராட்டியார்**

நாபி யகத்தே நலனுற நோக்கிடில்
சாவது மில்லை யுடம்பு

மயிர்க்கால் வழியெல்லாம் மாய்கின்ற வாயு
உயிர்ப்பின்றி உள்ளே பதி

வாயு வழக்க மறிந்து செறிந்தடங்கில்
ஆயுட் பெருக்கமுண் டாம்.

துரியங் கடந்த சுடரொளியைக் கண்டால்
மரணம் பிறப்பில்லை வீடு.

உரைசெயு மோசை உரைசெய் பவருக்கு
நரைதிரை யில்லை நமன்.

வாக்கு மனமும் இறந்த பொருள்காணில்
ஆக்கைக்(கு) அழிவில்லை யாம்.

மறவா நினையா மவுனத் திருக்கில்
பிறவார் இறவார் பின்.

**தாயுமானவர்**

கால்பிடித்து மூலக் கனலைமதி மண்டலத்தின்
மேலெழுப்பிற் றேகம் விழுமோ பராபரமே.

**மஸ்தான் சாகிபு**

''துள்ளுமான வாசிமேற் கொள்ளவும் வையாளி
துள்ள வின்னருள் புரியவும்
தூரநடவாது மேன் முச்சந்தி வீதியைச்
சுற்றி விட்டருள் புரியவுங்
கள்ள ரறியாது உள்ளறை யில்என்குதிரையைக்
கட்டி வைத்தருள் புரியவும்
கட்டாமலுங் கதவு சாத்தவும் வாயிலிற்
காத்திருந்து அருள் புரியவுங்
கொள்ளையிட வோலே வந்தாலும் வெருட்டி
கூட்டி விட்டருள் புரியவும்
கோட்டையுங் கைவசங் கொண்டுன்றன்
கொடிபோட அருள் புரியவும்
வள்ள லென வோடிமெய்த்தவ ராஜசிங்கமே
வரவேண்டு மென்ற னருகே
மாகுணங் குடிவாழு மென்னகத் தீசனே
மவுன தேசிகனே.''
''நொடிக்குமுன் மனவாசி மேலேற்றிக்—கொள்ளவும்
தூலேணி மேலேறிக்—கொள்ளவும்
படுமுடிச்சானவா ருதாரம்—விள்ளவும்
நடன மிடும்பரி துள்ளாட்ட—மெடுக்கவும்
இடபிங்கலை கண்டத்தாட்ட—மொடுக்கவும்
எனக்குப் பயந்தே எமன் ஓட்டம்—பிடிக்கவும்''
தொட்டுப தேசித்தவுடன் சோதி—தட்டவும்
தொடுமுன்னே சிவயோகம்—கிட்டவும்
திஷ்டை படைத்து அனுபூதி—மிஞ்சவும்



இஷ்டப்படிக்கு அருள் நின்று—கொஞ்சவும்
எனக்குப் பயந்தே எமன் நின்றே கெஞ்சவும்
கட்டை கடைத் தேற—லாகவும்
நற்றவு முற்றவு சித்தனு—மாகவும்
எனக்குப் பயந்தே எமன் ஒருத்தன்—சாகவும்
''மூலப் பிராணனை நோக்கும்—நோக்கின்
முத்தியின்வீ டுமக்கே வந்து—சாய்க்கும்
வாலப் பிராயமும்—வாய்க்கும்
வாசியினேற்ற மகிழ்ந்த ளித்தான்
எங்கள் குணங்குடிமஸ்தானே.

**கடவுளந்தாதி**

மூச்சில்லை யேது மொழிவது மில்லை முனையொழிய
பேச்சில்லை அம்பலம் பேருரு மில்லை பிறந்துஇறக்க
நீச்சில்லை பள்ள நிலையுமங் காச்சுது நின்றநிலை
யாச்சில்லை யென்றுசற் றங்கே யிருக்கிறது ஆனந்தமே.
ஒளியாம் விளக்கொளிக் குள்ளே
தெளிந்துகொண் டேடுருவ
வெளியாம் பராபர மாசோதி
யேவிந்து நாதமொரு
தெளிவா யிருந்து பிரகாசம் தோற்றும்
சிதம்பரத்தில்
அழியா வரம்பெற் றிருக்கப்
பதமுண் டடியவர்க்கே.

**தாயுமானவர்**

ஐந்துவகை யாகின்ற பூதமுத ஞதமு
மடங்கவெளி யாகவெளிசெய்
தறியாமை யறிவாதி பிரிவாக வறிவார்க
ளறிவாக நின்றநிலையிற்

சிந்தையற நில்லென்று சும்மா விருத்திமேற்
சின்மயா னந்தவெள்ளந்
தேக்கித் திளைத்துநா னதுவா யிருக்கநீ
செய்சித்ர மிகநன்றுகா
ணெந்தைவட வாற்பரம குருவாழ்க வாழவரு
ளியநந்தி மரபு வாழ்க
வென்றடியர் மனமகிழ வேதாக மத்துணி
பிரண்டில்லை யொன்றென்னவே
வந்தகுரு வேவீறு சிவஞான சித்திநெறி
மௌனோப தேசகுருவே
மந்த்ரகுரு வேயோக தந்த்ரகுரு வேமூலன்
மரபில்வரு மௌனகுருவே.

இதுகாறும் திருமூலர், தியானம், கலைநிலை என்ற பகுதிகளையும் விளக்கி பிறர் மேற்கோளும் ஒருவாறாக காட்டப்பட்டது. தொண்டைக்குமேல் உள்ளது மேல்துருவம் என்றும், மூலாதாரம், சுவாதிஷ்டானம், மணிபூரகம் இவை கீழ்த்துருவம் என்பதும் விளக்கப்பட்டன. யோகம் என்பது மறைந்திருத்த மேல்துருவ ஆற்றலுக்குக் கீழ்த் துருவ சக்தியை மாற்றுதல் என்பதும் காட்டப்பட்டது. இது சுழிமுனை நாடி மார்க்கமாக அமையவேண்டும் என்பதும் விளக்கப்பட்டது. இதன்மேல் மனம், பிராணன் என்பதைத் தனித் தனியே ஆராய்வோம். காயசித்தி, சாகாக்கலை, காயகற்பம், அழியா உடல், பிரணவதேகம் என்றவை யெல்லாம் ஒன்றே தான். பண்டைப் பெரியோர் அநுபவித்துளர் என்பதற்கே பல மேற்கோள்கள் காட்டப்பட்டன.

### மனம்

மனிதனிடம் எண்ணுகின்ற செயல் இயல்பாக அமைந்துள்ளது. அவன் உலகில் உள்ள பொருள்களை எண்ணி உலகத்துடன் ஒட்டிக்கொண்டான். மனித சமூகம் இன்றடைந்துள்ள நாகரீகம் எண்ணத்தின் பயனே தான். இதுபோலவே பண்டைய பெரியோர் அழியும் உலகப் பொருளில் மனத்தைச் செலுத்தாமல் என்றும் அழியாத நிலையில் மனத்தைச் செலுத்தி அதில் வெற்றி கண்டதே யோக சாஸ்திரம் ஆயிற்று. எல்லாரிடமும் மனம் இருந்தாலும் தக்க முறையில் திறம்பட அதைப் பயன்படுத்தும் திறன் சிலரிடமேதான் உள்ளது.



மனம் எனும் தத்துவம் தனியாக இல்லை. எண்ணும் ஒவ்வொரு எண்ணமும் ஒருசக்தியாகி மனிதனிடமிருந்து புறப்படுகின்றது. அந்தச் சக்தி அதன் அதன் தன்மைக்கேற்ப மனிதனை உயர்த்தவோ தாழ்த்தவோ செய்கின்றது. தாழ்த்துவது என்றால் பூலோகத்தொடர்வுடன் பொருந்தி மனிதனின் கீழ்த் துருவத்தைச் சிறப்பித்துப் பாசத்திலிட்டுவிடுகிறது என்பது பொருள். உயர்த்துவது என்றால் உலக சேவை, கடவுள் பக்தி முதலிய சத் காரியங்களில் ஈடுபட்டு நினைவையும் செயலையும் அத்தகைய முயற்சிகளில் கீழ்த் துருவம் செயல் படுவது குறைத்தும் மேல் துருவம் அவர்களுக்குத் தெரியாமலேயே ஒரு பண்பாட்டுக்கு வந்துவிடுவது என்பது பொருள்.

எண்ணும் மனம் மூளையைச் சார்ந்தும் செய்யும் கிரியை உடலைச் சார்ந்தும் பிராண இயக்கத்தை வெவ்வேறு கதிக்காளாக்குகிறது, அம் மனம், மூளை, அறிவு, உயிர், உணர்வு இவைகளுடன் சம்பந்தப்பட்டு ஒரு டேப் ரிகார்டுபோல மன உடலில் பதிவு செய்துகொண்டே உள்ளது. பதிவுகளைத் தாங்கி நிற்கும் ஒரு நிலையை உள்ளம் என்றும், மன மண்டலம் என்றும் கூறுகிறோம். அத்தகைய உள்ளம் ஆகாயத்திலும் உடலிலும் இடம்பெற்று மூளையில் ஆகூஷி மண்டலமாக உள்ளது. ஆகவே அம்மண்டலம் மனிதனைச் சூழ்ந்திருந்து ஞானேந்திரியங்களையும் கர்மேந்திரியங்களையும்

இயக்குகின்றது. இந்திரியங்கள் மனதன்றி தொழிற்படும் போது அறிவுக்கு அவை பதியாது. சில உட்கருவிகள் அறிவின் தொடர்பில்லாமலே தன்னியங்கிகளாகவும் உள்ளன.

மனதைச் சடம் என்று சில சமய நூற்கள் சொன்னலும் உண்மையில் மனம் சடமல்ல என்பதை இன்றைய விஞ்ஞானி கள் ஒப்புக் கொள்கின்றனர். திவ்விய திருஷ்டி பெற்றவர்கள் எவ்வளவோ தூரம் மன உடலில் சஞ்சாரம் செய்து மீண்டும் தமது தூல உடலில் வந்து கண்ட விஷயத்தை வெளிப்படுத்து கின்றனர். அதனுல் அறிவு மனதுடன் பொருந்தியேதான் சென்று திரும்பியுள்ளது. இறந்துபோன ஆவிகளின் தொடர்பு அவுஜாபோர்டு கொண்டு இறந்தோர்களோடு தொடர்பு காணும்போது இறந்துபோனவர்கள் தங்கள் விருப்பத்தை உடலில் உள்ளவர்களிடம் தெரிவிக்கின்றனர். அதனுல் பூத உடல் அழிந்தாலும் மன உடல் அவர்களிடம் உள்ளது என் பதை அறியவும். கனுவிலும் சில இறந்தோர் வந்து அவர் கள் கருத்துக்களை தெரிவிக்கின்றனர். அதனுல் இறந்துபோன வரிடமும் மன உடல் என்ற உள்ளம் உள்ளது.

மாந்திரீகத்தில் பிராணப் பிரதிஷ்டை முதலியவை செய்ப வைகள் சக்தியுள்ள மனமண்டலத்தில் செய்பவனிடமிருந்து தேவைப்பட்ட பொருளில் ஆற்றலைப் பதித்தபோது அதுவே பல வருஷங்கள் நிலைபெற்று தாயத்துகளாகவும், பிராணப் பிரதிஷ்டையான ஆலயங்களாகவும் ஆகின்றன. விஷம், நோய் முதலியவைகளைத் தீர்க்க, மாந்திரீகள் தன்னுடைய எண்ண சக்தியைப் பயன்படுத்துகிறுன். எண்ணும் திறன் மூளையில் உள்ளபடியால் ஒரு சிறிய சடத்துவமும் நுண்ணிய நிலையில் கலந்தே தேவைப்பட்ட பொருளில் பதிய வைக்கப் படுகின்றது. வெகுதூரத்தில் உள்ள பெரியோர்களின் ஆசி



...த்துக் காலத்தில் பக்தனுக்கு உதவியுள்ளதைப் பெரியோர் ...ளின் வரலாறுகளில் காண்கிறோம். எண்ண அலைகள் புறப் ...டு உலகில் ஒரு சிறு நேரத்தில் பரவிவிடுகிறது. ஒரு விநா ...க்கு 1,86,000 மைல் வேகத்தில் நடைபெறுகின்றது என்பதை ...ராய்ச்சியாளர் கூறுகின்றனர். இதை ஐம்பது வருஷங் ...ளுக்கு முன் ஒப்புக்கொள்ளுவது சிரமம். இப்போது ...ரேடியோ கருவிகள் மூலம் பல்லாயிரம் மைல் நிகழ்ச்சியை ...ருந்த இடத்தில் கேட்கிறோம். இருந்த இடத்தில் எல்லாம் ...ார அலைகளும், கிட்டின அலைகளும் உள்ளன. நமது ...ருப்பத்திற்கேற்ற ஸ்டேஷனைத் திருப்பி விரும்பின ...கழ்ச்சியைத் கேட்கிறோம். எல்லா நிகழ்ச்சிகளின் அலை ...ளும் ஒவ்வொரு இடத்திலும் உள்ளது என்பதையும் ...றிகிறோம். அதனுல் சப்தரூபமான அலைகளுக்குக் காலமும் ...ாரமும் இல்லையென்ற உண்மையைக் காணும்போது ...த்தைவிட நுண்ணிய மன அலைகளுக்குத் தேசமும் காலமும் ...ன்ற தத்துவமே இல்லையென்றே சொல்லிவிடலாம். எப்படி ...லி அலைகள் உலகத்தைச் சூழ இருந்து கொண்டுள்ளனவோ ...துபோலவே எண்ண அலைகளும் உலகத்தைச் சூழ்ந்தே ...ள்ளன. பாடுபவன் எண்ணமில்லாது பாடவில்லை. ...ண்ணங்களும் ஓசையின்வழி படர்ந்து எங்கும் செறிந்த ...பொருளாக ஆய்விடுகின்றன. ஆகவே ஒவ்வொரு மனித ...ும் தனிப்பட்ட எண்ணங்களுடனும் சமூகத்தில் ஏற்பட்ட ...ண்ணங்களுடனும் உலகத்தில் ஏற்பட்டுள்ள எண்ணங் ...ளுடன் கலந்தே உள்ளான்.

இத்தகைய எண்ண அலைகளால் செறிவுள்ள மனிதன் ...ாமான்யனுக உள்ளவரையில் கூட்டத்தைவிட்டு பிரித்துக் ...காள்வது கடினமானதாகவே உள்ளது. ஓரளவு வைராக்கி ...த்தால் பிரிந்தோ, மேலான நிலைகள் விருப்பம் கொண்டோ ...மையும்போது மன மாற்றம் அமைந்து ஓரளவு ஒழுக்கமும் ...ண்பாடும் அமைந்தவனுகிறுன். இதனிலும் சிறந்த ஒழுக்க

மும் பண்பும் அமையப்பெற்றவனிடம் மனதிற்கேற்ற பண்
உடலிலும் அமைந்துஉடல் மாற்றத்தை உண்டாக்குகின்ற
இந்த அடிப்படைத் தத்துவத்தைக் கொண்டு சிவ சிந்தனை
கொண்ட ஒருவனுடல் சிவம் பிரகாசிக்கத் தக்க தேஜசுட
பொருந்தி அழிகின்ற உடலும் மாறி ஒரு அழியாத உட
சிருஷ்டித்துக் கொள்ள முடியும் என்று சமயப் பெரியோ
கண்டனர். ''சிந்தைதனைத் தெளிவித்துச் சிவமாக்கி'' என்
மணிவாசகர் கூறியுள்ளார். நல்ல மனம் தீமையை நாடா
அன்பைச் செய்யும் அல்லது சாக்ஷியாக அமைந்துவிடு
தீமையை நாடின மனம் தீமையைச் செய்தே தீரும். எ
அளவு அன்பு பெருகுகிறதோ அந்த அளவு பகை இல்
அகண்டமான கடவுளிடம் அன்பு கொண்டவன் உல
எப்பகையுமில்லாமல் வாழக்கூடும் என்பதே பண்டையோ
கண்டமுடிவு.

ஆசையுதித்தபோது அன்பு நிலைகொள்ளாது. ஆ
யுள்ளவன் கடவுளிடம் பிரார்த்தனை செய்தாலும், உட
பயன் கிட்டாதபோது வெறுப்புக் கொண்டுவிடுகிறுன். ப
நிலைப்பதில்லை. இது உண்மையான பக்தியாகாது.

ஆசை யறுமின்கள் ஆசை யறுமின்கள்
ஈசனே டாயினும் ஆசை யறுமின்கள்
ஆசைப் படப்பட ஆய்வருந் துன்பம்
ஆசை விடவிட ஆனந்த மாமே. **261**

கடவுளை அடையவேண்டும் என்ற ஆசைகூடத் துன்ப
உண்டாக்குமென்பதின் பொருளை உணர்க. மனதில் ஆ
கொண்டவருக்கு வேகம் உதிக்கும். வேகத்திற்கேற்ற பிரா
கதி, அதற்கேற்ற செயல் உடலில் பதிவு கொள்ளுகிற
அத்தகைய மன அதிர்வைத் தாங்கும் உடல் நிலையில்லா
போது நோய்வாய்ப்படுகின்றனர். உயர்ந்த எண்ணங்க
ஒளி மண்டலமாகி உடலைச் சூழுகின்றன. தீய எண்ணங்க



இருளாகி உடலைச் சுற்றி இருளாகித் திரையாகிவிடுகின்றன. மனதின் ஆற்றல் மாத்திரம் இருந்து பண்பு இல்லாவிட்டால் அசுரர்கள்போல் அழிவை நாடிச்சென்று கெட்டுப்போவர். அசுரர்களும் கடினமான யோகங்களைக் கைக்கொண்டுதான் சித்தியை அடைந்தனர். பண்போடுகூடிய சத்திதான் மேன்மைக்குரிய சிவயோகம் அமைவது ''சித்தும் சிவமாதல் செய்தவப்பேறே'' (1644) என்று திருமூலர் அறுதியிட்டார்.

அத்தகைய மனப்பண்பு அமைய புற ஒழுக்கங்களும் அக ஒழுக்கங்களும் இயம, நியம, ஆசன பிராணுயாமம் என்றவைகளால் சொல்லப்பட்டன. இதன்மேல் மனத்திட்பம் பெற பிரத்தியாகாரம், தாரணை, தியான சமாதி நிலைகள் கூறப்பட்டுள்ளன. ஆசையை விடாதபோது எவ்வளவு படிப்பினாலும் வேதாந்த நிலையால் உணர்த்தும் பிரம்மபாவனை சித்தியாகாது என்பது திண்ணம். வைராக்கியத்தினால் அடைவது என்றது வாய்ப் பேச்சுதான். இயற்கை வெறும் வேதாந்தக் கொள்கையினரை பள்ளத்தில் அமிழ்த்தி நாசமுறவே செய்யும். இதை அறிய வேண்டுவோர் சிவநிந்தை என்ற தலைப்பு திருமந்திரம் பார்க்க விளங்கும். இந்த நெறியை மர்க்கட நியாயம் என்பர். பிர்மபாவனை இறந்த பிறகு கைகூடிவிடும் என்று உலகோரை ஏமாற்றிக் கொண்டுள்ளனர். சாதாரண மனிதனைப் பிறந்து, சாதாரண மனிதனாக வாழ்ந்து சாதாரணமானவரைப் போல் இறந்து பட்டவர் இறந்தபிறகு பிர்மமாகிவிடுவர் என்றது ஒரு வஞ்சனைச் சொல்லேதான்.

ஆகமவாதிகள் கொள்கை வேறு என்பதை அறிதல் வேண்டும். ''ஜீவனை சிவத்துக்கு வாகனமாக்கிவிடு'' என்பதே தான். சிந்தனை என்றதை விட்டு சிவ சிந்தனையாக நின்ல்வரை சிவமே தாங்கிக்கொண்டு சிந்தனைக்கேற்ற உடற

மாற்றம் அமைந்து அழியாத உடலையும் கொடுத்துவிடு என்பதுதான், முன்னைய ஆகமவாதிகள் கண்ட முறை.

ஒரு டேப் ரிகார்டில் மற்றொரு ஒலிப்பதிவு அதன்மே பதிவு செய்தபோது முன்னுள்ள ரிக்கார்டை மாற்றி புதி ஒலிப்பதிவு பதிந்து விடுகிறது. அதுபோலவே சிவத்தை நினைந்து நினைந்து, அதை அடையத்தக்க யோக முறையி நின்று தன்னை முழுதும் அதனிடம் விட்டுவிட்டால் எண்ண திற்கேற்ற செயல், செயலுக்குத் தக்க பண்பு, பண்புக்கு தக்க ஆரோக்கியம் அமைந்து எடுத்த உடலே சிவத்துக் வாகனமாகிறது. இதை மார்ஜால நியாயம் என்பர். அதா வது பூனைக்குட்டி கத்தினபோது தாய்ப்பூனை வந்து அத கஷ்டத்தை நீக்கிவிடுகிறதுபோல் அமைகிறது. இது எளி முறையானாலும் பழைய பாக்கியசாலிக்குத்தான் கிடை கும்.

இந்தப் பெருநிலையை அடைய எத்தனையோ வகைக முன்னோர் கண்டுள்ளனர். அத்தனையும் வீண் என்றே ம வாசகர் கூறி முடித்தார்! அறிவுடன் அறிவு சேர்ந்து பெறு பேறே சிவப்பேறு. அதைவிட்டு கருவிகளைத் தொழி னின்று நிறுத்தும் வல்லபங் கொண்ட ஹடயோகம், லம்பிக யோகம் இவற்றால் அடைய முடியாதென்றார். மனத்தை சூன்யமாக்குவதினாலும் அடைய முடியாதென்றார். வா தந்திரத்தாலும் அடைய முடியாதென்றார். பகிர்முக பாவனையில் செய்யும் சாம்பவீ மார்க்கத்தாலும் அடை முடியாதென்று திருவண்டப்பகுதியில் கூறுகின்றனர். இவை களை யெல்லாம் சொல்லி அகநோக்குக் கொண்ட கேச யோகத்தாலேயே அடைய முடியுமென்று அறுதியிட்டார் கேசரி யோகம் என்பது நயனங்களால் அடையும் நெறியாகு இதையேதான் திருமந்திரம் திருவாசகம், திருஉந்தியா எல்லாம் கூறுகிறது என்பதை அறியவும்.



இந்தப் பெருநிலையை அடைய கிரியை வழி நிற்போரும் முயல்கின்றனர். அது பாவனைக்கு அகப்படாத பொருள் பற்றி அது வீண் என்றே திருஉந்தியார், தத்துவப் பிரகாசம் ஆசிரியர்கள் அறுதியிட்டனர். பாவகம் பக்தனது கற்பனை. பாவகம் மனதின் செயல். மனம் இறந்தாலொழிய பிரம தரிசனம் கிட்டாது. முதலில் மனத்தைச் சங்கற்ப நிலையி லிருந்து பிரிக்க வேண்டும்.

ஆக்கிலங்கேயுண்டா யல்லதங் கில்லையாய்ப்
பார்க்கிற பரமதன் றுந்தீபற
பாவனைக் கெய்தாதென் றுந்தீபற.

உள்ளும் புறம்பு நினைப்பறி னின்றுள்ளே
மொள்ளா வமுதாமென் றுந்தீபற
முளையாது பந்தமென் றுந்தீபற.

*திருஉந்தியார்*

எப்படியுஞ் சதாசிவமே பொருள் என்றாலும்
இலங்கியசா யுச்சியத்துக் கேதுவன்றி
அப்படியை அன்றியர்ச்ச னைபுறத்திலானால்
அணுகாது சாயுச்சியம் அனைத்தினையும் கடந்து
செப்பரிய மனவாக்குக்கு எட்டாத ஒன்றைத்
திகழ்கிரியை யால்எட்டிச் சேரலாமோ
தப்பறிய இந்நெறியில் நின்றாற் பேறு
சாலோக சாமீப சாரூபங் காணே.

தத்துவப்பிரகாசம் 209

புவனியிற் சேவடிதீண்டினன் காண்க
இறுதிவரைப் படித்தறிக *திருவண்டப்பகுதி* 61

பாசத்திலிட்டதருள், நேசத்திலிட்டது அருள், முத்தியில் அருள் என்ற கொள்கை வலுவடைந்தபோது சிவமே உயிரில் பொருந்தி உயிரை இயக்கும் பெருநிலை கிட்டிவிடும்.

போக மூர்த்தியாயும் யோக மூர்த்தியாயும் சிவம் காம கலையில் விளங்குவதை அநுபோகிகள் அறிவர். யோகத் தினர்க்கும், போகம் உரியதேதான் என்ற உண்மையும் அறி வர். இந்த உண்மையை உணர்ந்தவர்க்கு காமகலையே சிவ கலையாகிவிடுகின்றது. உடலும் மாறிவிடும், உள்ளமும் மாறி விடும். இது அநுபோகத்தில் அறியக்கூடியதுதான்.

பெற்றசிற் றின்பமே பேரின்ப மாமங்கே
முற்ற வரும்பரி சுந்தீபற
முளையாது மாயையென் றுந்தீபற.

பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்தீபற
உன்னையே யாண்டதென் றுந்தீபற

பெண்டிர் பிடிபோல வாண்மக்கள் பேய்போலக்
கண்டாரே கண்டாரென் றுந்தீபற
காணாதார் காணாரென் றுந்தீபற.

**திருஉந்தியார்**

ஒழியாத விந்து வுடன்நிற்க நிற்கும்
அழியாப் பிராணன் அதிபலஞ் சத்தி
ஒழியாத புத்தி தபஞ்செப மோனம்
அழியாத சித்தியுண் டாம்விந்து வற்றிலே. 1948

வற்ற அனலைக் கொளுவி மறித்தேற்றித்
துற்ற சுழியனல் சொருகிச் சுடருற்று
முற்று மதியத் தமுதை முறைமுறை
செற்றுண் பவரே சிவயோகி யாரே. 1949

யோகியும் ஞானியும் உத்தம சித்தனும்
போகியும் ஞான புரந்தர னவோனும்
மோக முறினு முறையமிர் துண்போனும்
ஆகியவிந்து அழியாத அண்ணலே. 1950





அண்ணல் உடலாகி யவ்வனல் விந்துவும்
மண்ணிடை மாய்க்கும் பிராணனும் விந்துவுங்
கண்ணுங் கனலிடைக் கட்டிக் கலந்தெரிந்
துண்ணில் அமிர்தாகி யோகிக்கு அறிவாமே. 1951

**பிராணன்**

பிராணன் என்ற சொல்லைப் பலர் உயிர் வாழ்வன உட் கொள்ளும் காற்று என்று தவறாகக் காண்கின்றனர்: தத்துவ ஞானிகள் அப்படிக் கொள்ளவில்லை. ஆகாய பூதத்தி லிருந்து காணும் உருவங்கள் படைக்கப்பட்டுள்ளன. ஆகா யத்திலிருந்து உருவம் பெற ஒரு இயக்க நிலை வேண்டும். அந்த ஆகாயமானது எந்த சத்தியினால் இப்பிரபஞ்சமாய் உண்டாக்கப்பட்டுள்ளதோ அந்தச் சத்திக்குப் பிராணன் என்பது பெயர். எங்கும் நிறைந்துள்ள ஆகாயம் தன்னுள் உயிர்கோடிகளை இயக்கும் சத்திக்குப் பிராணன் என்பது பெயர். சிருஷ்டி நிலையில் ஆகாயத்தினின்றும் வேறுபட்டு உயிர்கோடிகள் வியக்தமாய் விளங்கி, திதி நிலையில் கண்ட உருவில் விளங்கி லய நிலையில் கண்ட உருவத்தைவிட்டு வெளியேறி மரணத்தை அடைந்துவிடுகின்றன. மரணம் ஏற் பட்டு தூல உடலழிந்தாலும் சூக்குமங்கள் உள்ளன. அவை களில் பிராணன் நிலைபெற்று அவைகளின் இயக்கத்திற்குக் காரணமாய் உள்ளது. மனிதன் உயிர் வாழும்போது சூக்கும தேகங்களும் உள்ளன. தூல தேகமும் உள்ளது. பிராணன் இரண்டு நிலைகளிலும் தேகங்களைத் தாங்கிக்கொண்டுள்ளது. இவ்வுயிர் சத்திதான் தூலமான பருவுடலையும் நுண்மையான சூக்கும உடலையும் தாங்கி நிற்கிறது. இந்த சத்தி சிருஷ்டிக்கு முந்திய நிலையில் ஆன்மாவினிடத்தில் கருவாய் அடங்கிக் கிடந்து விரிந்து பிரபஞ்சமாயிற்று. விரிந்த பிரபஞ்ச நிலையை விட்டு லயம் ஆக விரும்புவோர் இந்த சத்தியைத் துணை கொண்டு தூலத்திலிருந்து சூக்குமம் சென்று சூக்குமத்தி லிருந்து ஆன்மாவை யடைதல்தான் முறையாகும்.

சிருஷ்டிக்கு வருமுன்னும், வந்து லயம் அடையும்போது இந்த ஆன்மகருக்கள் எந்த ஆதாரத்தில் அடங்குகிறதோ அதைப் பரப்பிர்மம், சிவம், கடவுள் என்ற பெயர்களா அழைக்கின்றனர்.

அதைவிடப் பெரிய உருவமும், ஒத்த உருவமும் அ விடச் சின்ன உருவமும் உலகில் இல்லை. அப் பேருருவினி எப்படி சகல உருவங்களும் சூக்குமத்தில் லயம கின்றனவோ, அப்படியே சகல சக்திகளும், சகல அறிவு அங்கு லயமடைந்துவிடும். ஆகவே அந்தப் பெருநிலையி சிருஷ்டிக்கு முந்தின நிலையும் உள்ளது. லயத்தின் முடிவு உள்ளது. இந்நியதியினல் அங்கு இல்லாத பொருள் இந்த பிரபஞ்சத்தில் வேருக ஒன்று இல்லை. இந்தப் பெருநிலைக்கு தன்னை உயர்த்திக் கண்டவன் எல்லாக் கலைகளையும், எல்ல விதமான ஆற்றலையும் ஆற்றலைப்பற்றிய அறிவையும் சந்தே மறக் காண்கிருன். இந்த அடிப்படைத் தத்துவத்தி பிராணனை ஜெபித்து இயக்கநிலையை மாற்றிக்கொண்டவ உலகத்தில் எத்தகைய இயக்கத்தையும் தடுக்கவும், உண்டா கவும், சக்தி பெறுகின்றனர் என்பது யோகக் கோட்பாடு.

பிராணனின் நிலைகளிலெல்லாம் மனம் என்ற சிந்தனை பகுதி தகுதிக்கேற்ப கூடவோ குறைந்தோ உள்ளது. மன என்பது பிராணனது இயக்கத்தில் உள்ள ஒரு சூக்ஷ்மப் பகு யேதான். இரண்டுக்கும் நேரான சம்பந்தம் உள்ளது பிராணன் என்பதும் மனம் என்பதும் எங்கும் பரந்துள்ள சக்திக் கடல் என்றே சொல்லலாம். இரண்டுக்கும் இயக் சக்தி ஒன்ருகும். தூல சூக்கும நிலைபற்றி பிராணன் கீழ் துருவமான மூலாதாரத்தை இடமாகக் கொண்டுள்ளது மனம் மேல்துருவமான தொண்டையை இடமாகக் கொண் டுள்ளது. பிராணன் நிலைபெற்ற வடிவத்தில் அதன் சூக்கும மான மனமும் உள்ளது. உயிர்களின் இயல்பான மன



பிராணிகளைச் செயலில் தூண்டி நடத்துகின்றது. செயல் என்பதும் கிரியை என்பதும் ஒன்றேதான். மூச்சின் இயக்கம் உடலின் கிரியை ஆகும். ஆகவே ஒவ்வொரு மனிதனும் இரண்டு துருவ கதியால் ஆளப்படுகிருன். சிந்தனை நுண்ணிய தன்மையாதல்பற்றி மூளையின் பகுதிகளில் சிந்தனை தொழிற் படுகின்றது. சிந்தனையின்றிச் செயல்படும் பகுதிகளும் உடலில் அமைந்துள்ளன. அன்ன்த்தைப் பக்குவம் செய்தல், சுவாசித் தல், உணவில் உள்ள சலநிலைமையையும் மல நிலைமையையும் வேறுபடுத்தல் போன்றவைகள் மனிதன் விழிப்பு நிலையில் இரண்டு சக்திகளும் தொழிற்படுகின்றன. உறக்கத்தில் மனம் செயலின்றி நிற்கிறது. மற்ற இயக்கங்கள் நடைபெறுகின் றன. இதைப்போல சுத்தாவத்தையில் மனமும் ஒடுங்கி விடும்; பிராணனும் ஒடுங்கிவிடும் நிலையும் உண்டு. இந்த விஷயங்களை துகளறுபோதம், சிவானந்தபோதசாரம், திருமந்திரம் முதலியவைகளில் காண்க. இதைத்தான் பிராண ஐயம் என்று சிவயோகியர் கொண்டனர்.

இத்தகைய பிராண சக்தியை மனிதன் காற்ருகமட்டும் உட்கொண்டமையவில்லை. உண்ணும் உணவு, குடிக்கும் நீரிலும் அமைந்துள்ளது. சூரிய ஒளியிலும் உள்ளது. இவை போல் சிந்தனையால் மனிதனிடம் மனஅலைகள் தோன்றி அண்டம் என்ற பெயருடைய ஆகாயக்கூறில் மனமண்டலம் அமைந்துவிடுகிறது. அதன் தகுதிக்கேற்ப மனிதனின் மூளை யும் மாறிமாறி அமைந்துகொண்டே உள்ளது. சிந்தனையின் தகுதிக்கேற்ப மூளையும், அதற்கேற்ற பிராண இயக்கமும், அதற்கேற்ற உடலும் அமைந்து விடுகிறது. சிந்தனையின் ஆற்றல் உற்பத்தி செய்பவனேடு மட்டில் நின்றுவிடவில்லை. உலகெங்கும் பரவிவிடுகிறது சிந்தனைக்கேற்பப் பிராண சத்தியாகி உலகம் முற்றிலும் வியாபித்துவிடுகின்றது. இந்த அடிப்படையில் நல்லோரிணக்கம் நன்மையான பிராணசத்தி

யாக அமைகிறது. தீயோர் இணக்கம் தீமையான பிராண சத்தியாக அமைகின்றது. ஒவ்வொரு மனிதனும் இத்தகைய எண்ணமண்டலம் என்ற பேருடைய உள்ளத்தில் வாழுகின்முன்.

உள்ளம் என்ற அண்டம் பழைய பிறவிகளோடு சம்பந்தப் பட்டது. திடீரென மாற்றமுடியாது. தூய்மையான எண்ணங்கள் உள்ளத்தில் இடம்கொண்டுவிட்டால் பிராண சித்தி எளிதில் கிட்டிவிடும். அந்த நிலைக்குத் தகுதியுள்ள வர்க்கு யோகம் எளிதில் கைவரும். அல்லாதவர் இடருறுவர், மனம் தகுதி பெற்ருேரிடம் தகுந்த பிராணஜயம் அமைந்து பேராற்றலுக்குரியவராகிருர்கள்.

அகண்டாகாரத்தில் சிந்தனை செய்யும் ஆற்றல் பெற்ற வர்க்குக் கீழான துருவமான பிராணநிலை ஓய்வு பெற்று விடுகிறது. இதைச் சமாதி, அதீதத்துள்ள பிரக்ஞை துரியா தீதம், மனம்குவிந்தநிலை, மனதற்ற நிலை, பரிபூரண நிலை, மன மொழிக்கெட்டாத நிலை என்று பல பேரால் அழைப்பர். சமாதிநிலையிலும் பல படிகள் உள்ளன.

மனே சொரூபமான பிராணனைக் கட்டியாளும் முறை யான வழிக்கு ராஜயோகம் என்றும் சிவயோகம், சிவராஜ யோகம் என்றும் பெயரிட்டுள்ளனர். பிராணனை நேரே கட்டும் முறையில் ஹடயோகம், லம்பிகா யோகம், உள்ளன. கிரியை யின்வழி உபாசகர் கையாளுவது மந்திர யோகமும், பாவனை யோகமும் ஆகும். இன்னும் பலமுறைகள் உள்ளன. வட நாட்டில் பிரசித்தமான சுரராஜகுமாரவைரிரந்திர தந்திரம் என்று ஒன்றுண்டு, இதைச் சீக்கியர்களும் பல யோகியர்களும் அங்கு பயில்கின்றனர். இதனுல் நேரே நாததரிசனம் சென்று விடுகின்றனர். இதன் பொருள் சுரராஜன் இந்திரன்; அவன் குமாரன் அர்ச்சுனன்; அவன் வைரிகர்னன்; கர்னம் என்ருல்



காது; ரந்திரம் என்ருல் துளை; தந்திரம் என்ருல் யுக்தி. காதுத் துளையை அடைத்துச் செய்வதில் ஏற்படும் நாதவழிபாடு.

ஞானயோகம் தவிர மற்றவைகள் சமாதிவரையில் போனுலும் சிறப்புடையனவாகா. அறிவை அடைவதே ஞானயோகத்தின் குறிக்கோள். மற்றவைகளும் அறிவை அறிய ஒரு சாதனமாக அமையும். மனம் உலகநிலையில் பதிவுறும்போது சுட்டு பொருள்வழி சென்று பிராணனை இயக்கிமூலாதாரசக்கிரத்தைத் தொழிற்படுத்திக் கீழ்நோக்கு தலைச் செய்கின்றது. அப்படி கீழிறங்குவதும் கீழ் நோக்கு வதும் ஆகிய பிராணனையே சுழிமுனை நாடிவழியாக உயரச் செலுத்தும் ஒரு நெறியைத் தமிழர் கண்டுள்ளனர். வட நாட்டிலும் இந்நெறியை சாக்த தந்திரம் என்ற பேரால் அழைக்கின்றனர். தெற்கேயிருந்து வடக்கே போயிற்ரு அல்லது வடக்கேயிருந்து தெற்கே வந்ததோ என்ற பிரச்சினையை விட்டுவிடுவோம். எப்போது கந்த புராணம் பிராபல்யமடைந்து பசு, பதி, பாசம் என்ற முப்பொருள் உண்மையைக் கூறிற்ரு அப்போதிருந்து பிரசித்தம் ஆகி விட்டது என்றேகொள்ளலாம். ஈழே பொந்தில் இருந்த போது நரியென்றும் மேலே சிரசில் பிராணன் போகும்போது குதிரை என்றும் பேர்பெற்றது. அதனுல் இது வாசியோக மாயிற்று, திருமூலர், மணிவாசகர், பலசித்தர், திருஉந்தியார் ஆசிரியர் எல்லாரும் இந்த நெறி பற்றினவர்களே.

இந்திரியங்களில் மிக நுட்பமானது கண்கள், ஏனைய இந்திரியங்கள் வந்த விஷயங்களைத்தான் பற்றும், கண்கள் சென்று பற்றும் திறம்படைத்தவை, அண்டத்தினுள் எல்லா வாசனுரூபமான விஷயங்களும் உள்ளன. அவைகள் சூக்கும மாக பித்திகையின் எல்லைவரையில் உள்ளன. உடலின் இயக்கத்திற்குக் காரணமான அறிவு நிலைமையும் சிரசிலே உள்ளது. ஆத்மா பித்திகையின் உச்சியில் சிரசின்மேல்

பன்னிரண்டு விரற்கடையில் உள்ளது. ஆத்மா அந்தக் கரணங்களைக் கொண்டு இந்த உடலை இயக்கிக்கொண்டும் அறிந்துகொண்டும் உள்ளது. துவாதசப் பெருவெளியில் அகண்ட வடிவான சிவசக்தியுள்ளனர். கீழுள்ள உடல்நிலையிலும் சிவத்திற்குப் பிரதிநிதியான சதாசிவ பீடமும் (penal gland), சக்திக்குப் பீடமான (pituitary gland) மகேசுவர பீடமும் உள்ளன. மனம் ரூபாரூபம் உள்ளவரையில் சதாசிவ தானம் தொழில்படும். மனம் சகல உருவத்தையும் விட்ட போது சதாசிவத்தைத் தாண்டி சிவசத்தி நிலையில் பதிவுறும். அப்போது அகண்ட நிலைதான் தோற்றும். அகண்ட வியாபகமும் பெற்றுவிடுவர்.

இரு கண்களின் பார்வையையும் குருகாட்டும் இடத்தில் சேர்த்து அங்கு காணும் ஒளியையே (குருவாகக்-கொண்டு) லக்ஷியமாய்க் கொண்டு மனம் பதிவுண்டால், மனம் சிரசிலே அஷ்டதளகபில யாத்திரை தொடங்கி கிரமமாய் பிரமரந்திரம் அடைய குரு வழிகாட்டுவார். இதனால் சிரசில் கவிழ்ந்த சகஸ்ரதளம் நிமிர்ந்து ஊர்த்துவமுக சகஸ்ரதளமடைந்து மனதின் ஓட்டத்தை நிறுத்திவிடும். பிராணனை அடக்கும் எவ்வித முயற்சியும் இல்லை என்பதை அறியவும். மனம் சிறிது சிறிதாகக் கீழ்நோக்குதலை விட்டு ஊர்த்துவ கதியடையும் போது பிருதிவி பூதம், அப்பு பூதம், அக்கினிப்பூதம், வாயுபூதம் இவைகள் நான்கும் மனதின் தகுதிக்கேற்ப மேலே கவர்ச்சி அடைந்து பிராணனும் சுழுமுனை நாடிவழியாக மேலேறித் தொழில்படும். இதுவே இந்த யோகத்தின் நெறி. கீழிலும் ஆகாயம்தான் மேலிலும் ஆகாயம்தான் எனினும் பரமாகாயமான வெளியிலே விழித்துப் பரபோகத்தில் அழுந்தும்படி கூட்டுவித்த உபாய குரு மிகவும் திறம்படைத்தவர் என்பதை அறியவும்.



மூலை யிருந்தாரை முற்றத்தே விட்டவர்
சாலப் பெரியரென் றுந்தீபற
தவத்தில் தலைவரென் றுந்தீபற

திருவுந்தியார்

வகையான வாசியது மனமும் கண்ணும்
மயங்காதே சிவாய மென்று புலம்பிடாதே
பகையாதே அட்சரங்கள் ஐம்பத் தொன்றும்
பரிபாஷை யாயுரைத்த நாமபேதம்
திகையாதே நாமமென்று மட்சரங்க ளென்றும்
செபியாதே யறிவுகெட்ட மனிதரைப்போல்
நகையாதே மானிடர்கள் பல்சாதி யென்று
நம்பாதே நல்வினையின் காலைப்பாரே
திருமூர்த்தி தேவர்முதல் மனித ரோடு
சிவயோகம் பெற்றிருந்த மார்க்கந் தன்னைப்
பிரியமுட னெனைத்தொழுது கேட்ட பிள்ளாய்
பிங்கலையும் இடகலையும் மாறும் போதங்
கறிவான சுழிமுனையில் மனத்தை வைத்தே
அசையாமல் ஒருமனமாய்க் காக்கும்போது
குறியான சிவயோகம் சித்தியாச்சு
கோடிஜன்மம் சித்தரைப் போல் வாழலாமே.

நிஜானந்த போதம்

சிவாய என்றது காரண பஞ்சாட்சரம். இதன் சூது அறியாமல் ஆண்டுக்கணக்காய்ச் செபித்துக்கொண்டுள்ளனர்.

சிவா என்றால் சிவத்தின் சக்தி என்று பொருள். சிவா, சிவை என்ற இரண்டும் ஒன்றே.

ய—ஆன்மா.

சிவத்தின் சத்தியைக் கொண்டு சிவத்தை அடை என்ற பொருள் நுணுக்கம் சிவத்தின் சத்தி மேலே ஒளியாய்

உள்ளது சிவத்தின் சத்தி கீழே இருளாய் பிராணனும் அபானனும் உள்ளது.

மேல்துருவத்தை உயர்த்தினபோது கீழ்த்துருவம் கீழ் நோக்குதலைவிட்டு மேனோக்குதலும். அப்போது அது சுழுமுனை மார்க்கமாய் மேலேறி பிரமரந்திரப் புழையை அடையும். பஞ்சாட்சரத்தில் சிகாரம் அக்கினி அம்சமானது. சிகாராதி பஞ்சாட்சரம் என்றதே ஒளிமுறையில் பஞ்சாட்சர தரிசனம் செய்க என்றதே உள்ளக்கிடையாகும். இது எட்டு மிரண்டும் **உருவானலிங்கம்** என்பதை நினைவிற்கொள்ள வேண்டும். எட்டு என்பது **அகரமாகிய இடப்பக்க நேத்திரம்**. சந்திர கலை, இரண்டு என்பது **உகாரம் என்ற பிங்கலாநாடி** அல்லது சூரியகலை. இவை இரண்டையும் சேர்த்தபோது **பத்து** என்ற ய காரம் உதிக்கும். இரண்டும் சேர்ந்த இடம்தான் ஆன்மா விளங்கும் இடம் என்பதை அறிந்துகொள்ள வேண்டும்.

கீழேயும் புருடன் என்ற பேருடைய ஆன்மாவின் பிரதிநிதி உள்ளது. விஷ்ணுவும், பிரமனும் உருத்திரனும் ஆட்சி செய்கின்றனர். மேல்துருவத்தில் மாகேஸ்வரனும் சதாசிவனும் சத்தி சிவமும் ஆன்மாவும் உள்ளார்கள். அங்கேயும் வாக்கு ரூபமாக உருத்திரன் உள்ளார். மாயை என்ற மகாரம் கண்டத்திற்குக் கீழே அசுத்த மாயையாகவும் கண்டத்திற்கு மேல் சுத்தமாயையாகவும் உள்ளன. அசுத்த மாயையில் கீழ்த்துருவம் தொழில், சுத்தமாயையில் கண்டத்திற்கு மேலே தொழில் என்ற கருத்துரை நினைவில் கொள்ளவேண்டும்.

மாயை என்பதும் சத்தி என்பதும் ஒன்றேதான். சுத்த மாயாசத்தியான குண்டலினி அம்மையைக் கொண்டு சிவத்தை அடைக என்பதே காரண பஞ்சாட்சரத்தின் உள்ளுறைப் பொருள்.



அப்பர் தம்முள்ளே உயிர்ப்பாயும், அதை நாடினவழி அதுவே புறம்பாயும் அமையும் பிராணசத்தியையே தமது இன்பத்துக்கு உகந்த கடவுள் என்கிறார்.

என்னி லாரும் எனக்கினி யாரில்லை
என்னி லும்இனி யானொரு வன்னுளன்
என்னுள் ளேஉயிர்ப் பாய்ப்புறம் போந்துபுக்
கென்னு ளேநிற்கும் இன்னம்பர் ஈசனே.

அப்பர் தேவாரம்

கிரியை வழியேதான் உபாசனையிலும் மெத்தெனப் பலன் தரும். உபாசகர்கள் அந்தந்த உபாசன மூர்த்தத்தை வழிபடும் போது பக்தன் உபாசன மூர்த்தியை உள்ளுணர்வில் காண்கின்றனன். அம்மூர்த்தியின் அருளால் பக்தருக்குக் கேவல கும்பகம் அமைவதுண்டு. இராமகிருஷ்ணர் பக்தி கண்டியேயாவார். உபாசன மூர்த்தியின் அருளால் கேவல கும்பகம் அமைந்த பெருநிலையை அவர் எளிதில் அடைந்தார். அந்த முறையில்தான் மூர்த்தி வழிபாடும் தோத்திரங்களில் அமைந்துள்ளது. திருவாசகத்தில் கூறியுள்ள மூர்த்தம் அர்த்தநாரி ஒன்றேதான். நடராஜ உருவத்திற்குடைய திரு உருவம் இடம்பெறவில்லை என்றும் தில்லை என்ற ஆகாயத் தானத்தையே குறிக்கோளாகக் கொண்டுள்ளார். சுழுமுனை நாடிக்குரிய சிவசத்தி வழிபாடு ஆகாயத்தை அடைவதேதான் குறிக்கோள். தொன்மைக் கோலம் என்று அதில் உள்ளது பிரிப்பற்ற சத்திசிவம் என்ற சுழுமுனை நாடியில் தொழிற்படுபவர்களே.

கீழ்த்துருவமாகிய மூலாதாரத்தில் ஆண் என்றும் பெண் என்றும் பேதம் பொருந்தி காமத்தில் ஈடுபடுகின்றனர். சுழுமுனை நாடி ஊர்த்துவ முகமானபோது ஆண் என்றும் பெண் என்றும் பேத உணர்வு அற்றுவிடும். பஞ்சபிரமத்தில்

சத்தியோஜாதமான மேற்குத் திக்கில் சாதாக்கியம் பொருந்தும்போது.

ஊன்றி நின்றபோது மற்ருெரு காலினுல் தாங்க வேண்டிய பாரமும் அந்தக் காலிலேதான் அமையும். அது போல சாதகனின் இடக்கண் பார்வையை வலப்புறமாக்கின போது வலது புறமான பிங்கலா நாடியில் கனம் தங்கும். வலப்புறமான இடக் கால் உயர்த்தப்படும். கடவுளுக்குக் கால் என்ற தத்துவம் ஜீவவொளியில் சிவ ஒளிபதிந்து நடத்துகின்றது என்ற பொருளேயாகும். ஜீவவொளி ஜீவர்களின் கண்களில் நிறைந்துள்ளது. இந்தக்கண்களின் உதவியைக் கொண்டு கடவுளை அடையவேண்டும் என்பதேயாகும். குரு காட்டும் இடத்தில் பார்வை பதிந்தபோது ஊன்றிய திருவடி என்ன என்பதும் தூக்கியதிருவடி என்ன என்பதும் விளங்கும். இது அமைந்தபோது ''லலாடப் பூட்டு'' என்ற புருவ மத்தி திறந்து விடும். இதை உணர்ந்து நிலைபெற்ருல் காப்பாற்றப்படுவாய் என்பதே வீசிய கையும் அபயமுத்திரையும். இதன் மேலே நீ சென்ருல் விந்து நாத மண்டலங்கள் உதித்துவிடும் என்பதே அக்கினி சட்டியும் டமருகத்தின் சின்னமும் ஆகும். இந்த நிலையைத் தாண்டினுல் ஆகாயவெளி உனக்குக் கிட்டும் என்பதே சிதம்பர ரகஸ்யம். இந்த விந்துநாதங்கள் உதித்து தொழிற்படும் பக்தன் ஒரு ஆனந்த வடிவமாகவே இருப்பான். உலகிலிருந்து வாழ்ந்தாலும் உலகம் பற்ருத ஒரு மகிழ்ச்சி நிலையில் இருப்பான் என்பதை உணர்த்தும். ஆனந்தக் கூத்தனுடன் தொடர்பு கொண்ட ஜீவன் தனது ஆணவத்தை அறவேவிட்டு ஆனந்தத்திலே நிலைபெறுவான். இங்கு ஆணவம் கீழ்ப்படுத்தப்பட்டதை முயலகன் என்றதால் குறிப்பிட்டார்.

இன்பத்தை நாடின மனம் சிரமமின்றி நீண்டநேரம் தங்கும். துன்பத்தில் நாடின மனம் சோர்ந்து உடனே வெளியேறத் தொடங்கும். இதற்கு உவமானம் சிற்றின்பத்தைப் போல பேரின்பம் என்ருர்கள். சிவவொளியும் ஜீவவொளியும் சேருவதில் ஓர் இன்பம் உண்டு. ஒரு பெண் தன் பிறந்தகத்தைவிட்டு மணளனுடன் வாழ்வதில் இன்பத்தைக் கண்டு பழைய பிறந்தகத்தைப் பற்றிக்கொள்ளாது நிற்பதுபோல இந்த இன்பம் உள்ளது என்று திருமூலர் கூறுகிருர்.



விருப்பொடு கூடி விகிர்தனை நாடிப்
பொருப்பகஞ் சேர்தரு பொற்கொடி போல
இருப்பர் மனத்திடை எங்கள் - பிரானுர்
நெருப்புரு வாகி நிகழ்ந்து நின்ருரே. 2640

நந்தி பெருமான் நடுவுள் வியோமத்து
வந்தென் அகம்படி கோயில் கொண்டான் கொள்ள
எந்தை வந்தானென் றெழுந்தேன் எழுதலுஞ்
சிந்தையி னுள்ளே சிவனிருந் தானே. 2641

சிவகாமித்தாய் ஆலயம், ஆயிரங்கால் மண்டபம், சிவகங்கை இவைகளை அறிதல் நலம் என்று இங்குக் குறிப்பிடுகின்றேன். ஒரு புருஷன் மேனேக்கி வடக்குப்புறம் தலை வைத்துப்படுத்திருந்தால். வலக் கண்ணின் மேல் பாகம் சிவகாமித்தாய் ஆலயம் ஆகும். இடக் கண்ணின் மேல்புறம் ஆயிரங்கால் மண்டபம் ஆகும். இந்த இடைப் பிரதேசம் என்பது சிரசின் மேலே துவாத சாந்தப் பெருவெளி வரையில் செல்லுவதுதான் சிவகங்கை என்ற அமிர்த வாவியாகும்.

கிரியை வழியில் உருவமானபடியால் இதற்கு உருவமான புஷ்பங்கள் உபயோகிக்கப்படுகின்றன. ஞானிக்கு எந்த புறப்பூசையும் இல்லாதபடியால் ஆதாரசக்கரங்களும் நேத்திரங்களுமேதான் புஷ்பம் ஆகும். கை என்றது துதிக்கை என்ற பொருளுடையது. துதிக்கின்ற கை சுழுமுனை நாடிதான்.

இந்தப் பொருளேதான் உற்சவகால துவஜாரோகணத்தில் உட்பொருளாக உள்ளது.

விருஷபம் - விந்துகளே
எழுதின சீலைத்துணி - சுழுமுனை நாடியில் சுற்றி ஏறுவது
எழுதினரிஷபம் ஒளிவடிவான புருஷன்
மூன்று விட்டம் - சோமசூரிய அக்கினி மண்டலங்கள்
மணிகள் - நாதசம்மியம் சந்திர மண்டலத்தில்

இந்த மேல் நினைவில் மனம் பதிவுற்று கீழேயிறங்காமல் உயரத்திலே நின்றால் பிராணன் அசையாது நின்றுவிடும். அப்போது தேகம் தானல்ல தேகியே தான் என்னும் உணர்வில் சாதகன் நிற்பான்.

மண்டலத் துள்ளே மனவொட்டி யாணத்தைக்
கண்டகத் தங்கே கருதியே கிழ்க்கட்டிப்
பண்டகத் துள்ளே பகலே ஒளியாகக்
குண்டலக் காதனும் கூத்தொழிந் தானே. 81[illegible]

உடலில் சிரசின் சத்திசிவ சொருபமான அபான பிராண சேர்க்கையைத் திருமணமாக்கினர். அங்கு உதிக்கும் இன்ப நிலையை ஆனந்தம் என்று கொண்டனர். இந்த ஆனந்த நிலையில் மனம் அசையாது நிற்பதை பிர்மானந்தம் என்று கூறினர். இதைச் சுகருபம் என்றும் கூறுவர். இந்த நிலை முத்தியாகா விடினும் இந்திரியங்களை ஜெயித்து நிற்கும் ஒரு சுக நிலையே ஆகும். சிதம்பர ரகசியம் என்றதெல்லாம் பரவெளி தான். இத்தகைய பரவெளியை உடலில் கண்டு அந்தப் பெரு நிலையை அடைய தேகத்தில் ஒரு ஆலய அமைப்புக் காட்டி உள்ளனர் என்ற உண்மையை அறிய வேண்டும். உள் நாக்குப் பிரதேசத்திற்கு முன்பக்கம் உள்ளது சத்திபீடம் என்றே சொல்லலாம். ஆங்கிலத்தில் (Pituitary gland) என்று சொல்வர். பின்னுள்ளது அதைவிடச் சற்று உயரத்தில் (Peneal gland) என்ற சதாசிவபீடம். இவையிரண்டையும் திருமூலர் சொல்லியுள்ளார்.



மோழை யடைந்து முழைதிறந் துள்புக்குக்
கோழை யடைக்கின்ற தண்ணற் குறிப்பினில்
ஆழ அடைத்தங் கனலிற் புற்ஞ்செய்து
தாழ அடைப்பது தன்வலி யாமே. 2549

பச்சிம திக்கிலே வைத்த ஆசாரியன்
நிச்சலும் என்னை நினையென்ற அப்பொருள்
உச்சிக்குக் கீழது உண்ணுக்கு மேலது
வைச்ச பதமிது வாய்திற வாதே. 1780

**மதுரை வாலசாமி ஞானக்கும்மி**

எண் சாணீள மொரு வீடா மதில்
எட்டொரு பீற்றல் மலக் கூடாம்
பஞ்சாயக் காரரீரைந்துட பேருந்தெய்வம்
பதியிதென்கிறார் ஞானப்பெண்ணே. 38

உண்ணுக்கென்ற கொடுமரமா மதிற்
கோபுர சந்திர புட்கரணி
அண்ணக் கென்றே வலப்புறத்திற் கண்ட
தக்கினி தீர்த்தமாம் ஞானப் பெண்ணே. 39

நாற்பத்து முக்கோண மண்டபமா மதன்
நடுவிருக்குதாஞ் சிங்காரம்
பார்ப்பது சக்கரக் கோட்டையிலே யிந்தப்
படியிருக்குதாம் ஞானப் பெண்ணே. 40

பீடமிருப்பது மையத்திலே பலி
பீட மிருப்பதுங் குய்யத்திலே
மாடமிருந்த சிவாலயத்தின் மணி
விளக்கிருக்குது ஞானப் பெண்ணே. 41

இப்படியான திருக் கோயிலதற்
கெப்படி வாயிலிருக்குதோ
அப்படி யென்று தெரியாமற் றெரிந்
தலைகிறாடி ஞானப் பெண்ணே 42

வாயு வென மறுகுகின்ற மனமடங்கும் வகை தடுப்பான்
ஆயவவ னரிபிரம னிந்திரன்சண் முகன்குருவும்
ஏயபல தேவதைகள் யோகிதபோ தனனறிஞன்
ஆயினெல்லாமுடையானுமவனணங்கு நுண்ணிடையாய்
தேவிகாலோத்திரம் - 4

அறிவு நிலை தவமடக்கம் புண்ணியந்த்யானங் குணங்கள்
நெறியுடைய முத்திநெறி முத்தியுபாயந் நினைக்கின்
மறுகும்வளி யனையமன மடங்குவதொன் றியாததுவே
அறிவுடையோ ரிவையனைத்து மாமென்றேயறைகுவராய்
தேவிகாலோத்திரம் - 5

கருத்தடங்கின் முத்தியது கையகலிற் கட்டாகும்
விரித்தபொருளிது வென்ன வறிவுடை மேதக் கோர்
திருத்தகுநல் லறிவாலே சித்தத்தைத் திரும்பாமல்
அருத்தியுட னிலைநிறுத்து மஃதறிவின் பயனுமால்
தேவிகாலோத்திரம் - 6

7. உண்மை காய சித்தி உபாயம் வேண்டும்

உடம்பார் அழியில் உயிரார் அழிவர்
திடம்பட மெய்ஞ்ஞானஞ் சேரவு மாட்டார்
உடம்பை வளர்க்கும் உபாயம் அறிந்தே
உடம்பை வளர்த்தேன் உயிர் வளர்த்தேனே. 724

இதன் பொருள்.

உடம்பு+ஆர்; உயிர்+ஆர் எனக் கொள்க. ஆர் என்றால் "அகத்திற் செறிகதிர்ப்போர்" என்பது சூடாமணி நிகண்டு.



எந்த அறிவாகிய சூரியன் உடலையும் உயிரையும் சுமக்கிறுனே அவன் என்பது பொருள். உடலைவிட்டு உயிர் வாழக்கூடியது; உயிரைவிட்டு உடல் வாழமுடியாது. அப்படித் தனித்து வாழக்கூடிய தகுதி உயிருக்கு இருந்தாலும் தேகம் அழிந்தால் தேகத்தைத் தாங்கியிருந்த உயிரும் அழிந்தமாதிரி நிலை ஏற்படும். உயிர் கருவி கரணம் கொண்டே அறிவைப் பெற்று வந்தது. தான் கருவி கரணம் இன்றி அறியும் ஆற்றல் உடையவன் என்பதை உயிர் அறியாதது. பழக்க வாசனையால் கருவி உடலோடு பிரிந்து விட்டபடியால் கண்ணிழந்த குருடன் போலாகிவிடுகின்றது. உயிர் அழியாததாகினும் சுதந்தரமாய் அறியும் ஆற்றல் பெற்றுக் கொள்ளாதபடியால் உயிரும் அழிந்த மாதிரியாகும். உயிரின் தகுதியை அது அறிந்து கொள்ளாத அபக்குவ நிலையில் உள்ளது. உடம்பு உள்ள போதே உயிர் தனித்தியங்கும் ஆற்றலைப் பெற்றுவிட்டால் பிறகு உடல் இருப்பினும் இல்லா திருப்பினும் அதற்குக் கவலையில்லை. உயிர் பூலோகத் தொடர்பு கொண்டது. தனது சமய ஆற்றலை அறிந்து கொள்ளவேதான் இங்கு வந்தது. அப்படிச் செய்யத் தவறிய படியால் அது விளக்கம் பெருமல் அழிந்தது. இப்படி ஞானம் பூர்த்தியாகாமல் உடல் அழிந்து போகாதபடி நான் ஒரு உபாயத்தை அறிந்தேன். அதனுல் உடலையும் தக்கமுறையில் வளர்த்துக் கொண்டேன். அதனுல் உயிரையும் வளர்த்துக் கொண்டேன்.

சிவயோகத்தில் உடல் ஆரோக்கியம் முதல்நிலை எனப் பெறப்படுகிறது.

காயத்துள் அமுதூற ஊற நீ கண்டு
கொள் என்று காட்டிய
சேயமாமலர்ச் சேவடிக்கண் நம்சென்னி
மன்னித் திகழுமே.

சென்னிப் பத்து-திருவாசகம்.

## 2. உடலில் சிவம்

உடம்பினை முன்னம் இழுக்கென் றிருந்தேன்
உடம்பினுக் குள்ளே யுறுபொருள் கண்டேன்
உடம்புளே உத்தமன் கோயில் கொண்டான் என்று
உடம்பினை யானிருந் தோம்புகின் றேனே. 725

இவர் உடம்பினைக் குற்றம் பொருந்தியது என்று நினைத்திருந்த நிலை ஒன்றென்று ஏற்படுகிறது. இது வேதாந்த நெறி. காணப்பட்டதெல்லாம் மாயை. சத்துப் பொருள் அல்ல. உண்மையில் இல்லாத ஒன்று இருப்பதுபோல் ஒரு பொய்த் தோற்றம் என்றும் பிர்மம் ஒன்றே சத்தியப்பொருள். அசத்தாகியவை எப்போதாகிலும் விடவேண்டியதே தான். எது எப்போது விட்டாலென்ன என்ற கொள்கையில் உடம்பைக் காக்கும் எண்ணம் உடையவராக இல்லாமல் பிர்ம பாவனையில் இருந்து உடம்பைக் கெடுத்துக் கொண்டதே தவிர பிர்ம பாவனையும் சித்தி பெறவில்லை என்ற உண்மையைக் கண்டு பிர்ம பாவனை சித்திபெற முதலில் உடல் நிலை பெறவேண்டும் என்ற முடிவுக்கு வந்து விட்டார்.

பிந்திய நெறி ஆகமநெறி. பிர்மம் ஒன்றே சத்தாகிய உயிருக்கும் அசத்தாகிய உடலுக்கும் இடம் கொடுத்துத் தாங்கிக் கொண்டுள்ளது. உண்மையான சிவனை உடலில் அறிந்தால் உயிர் அழியாததுபோல் உடலும் அழியாததாகிவிடும். சிவத்தைத் தாங்கும் உடலில் சிவாலயம் அமைந்து விடுகிறது. சிவாலயமாக உடல் மாறிவிட்டபடியால் சிவாலயமாகவே என்னுடலை நான் மாற்றி வாழ்கின்றேன் என்றார்.

முன்னது வேதாந்த நெறிவேட்கை விட்டோர்க்குக் கிடைப்பது. உலகினர் வேட்கையை விடுவது அவ்வளவு சுலபமன்று. அதனால் வேதாந்தம் உலகினர்க்குப் பயன்படாத நெறியே தான்.





பின்னது ஆகமம். எல்லாவற்றிலும் சிவம் இருப்பதால் கீழ்த் துருவத்திலும் சிவம் போகியாக உள்ளது. அதையே மேல் துருவத்திற்கும் மாற்றிவிட்டால் கீழ்த்துருவம் கெடாமலே மேல்துருவம் அமைந்துவிடும். கீழ்த்துருவமும் செயல்படும். மேல்துருவமும் செயல்படும். இதை வேதகாலரிஷிகள் அறியவில்லை என்பதை பிரஹதாரிணிய உபநிஷத்தால் காணலாம். முதலில் சிவம் என்ற சொல்லில்லை. வேதகாலத்திய முனிவர்கள் பின்னர் சதாசிவம்வரையில் கண்டோ ஆகமவாதிகளைப் பார்த்து ஒப்புக் கொண்டோ உள்ளனர். ஆனால் அதோமுகச்சக்கிரத்தையும் மேலே உள்ள ஐந்து முகத்தையும் ஒன்று படுத்துவதில் உள்ள இரகசியத்தை அவர்கள் அறியவில்லை. இரு நிலைகளையும் ஒன்றுபடுத்துபவர் என்றும் குமரனுகவே வாழலாம் என்ற கொள்கை சோமாஸ்கந்த வடிவின் இரகசியம் ஆகும். சிவம் சத்திஸ்கந்த என்பவை சேர்ந்தநிலை சோமாஸ்கந்த உருவம். கந்தன் என்பது ஆன்மா. இந்த மூன்றும் என்றும் அழியாதவைகளே. இவர்கள் உடலும் அழியாததே என்றார்கள்.

திருவாசகத்திலும் இந்த உண்மையைக் காணலாம் — வேதாந்த நெறி:

அன்ருலின் கீழிருந்தங் கறமுரைத்தான் ஆயிடினும்
கொன்ருன்காண் புரமூன்றுங் கூட்டோடே சாழலோ

என்ருர்.

இத்த மூல சாதன விவரம் இல்வாழ்க்கையில் உள்ளவனுக்கே உரியது. கோவில் குருக்கள் மனைவியுடன் வாழ்பவரே பூஜைக்கு அருகதையுடையவராகின்ருர்கள். ஆகம சம்பிரதாயத்தில் இல்வாழும் ஆசாரியனிடத்தேதான் இல்வாழ்க்கையுள்ளவன் தீக்ஷை பெறவேண்டும். துறவி துறவிக்குத் தீக்ஷை

கொடுக்கலாம் என்ற நியதியை வைத்துள்ளனர். திருமந்திரத்தில் துறவியார்க்கே உரிய கேசரியோகத்தைக் கூறிப் பிறகு பரியங்க யோகம் அமைந்துள்ளது.

ஆகம நெறியில் ஈசான முகத்தில் வெளிப்படும் மாகேசுவர வடிவங்கள் ஐந்து. அவை சந்திரசேகரர், சோமாஸ்கந்தர், நடராஜர், இடபாரூடர், கல்யாண சுந்திரர் ஆகும். எல்லாம் சக்தியுடன் கூடினவைகளேதான். இத்தகைய சம்பிரதாயம் காப்பாற்றவே இறைவன் போக மூர்த்தியாயினர். அவரே யோகமூர்த்தி.

உலகறியத் தீவேளா தொழிந்தனனேல் உலகனைத்தும்
கலைநவின்ற பொருள்களெல்லாம் கலங்கிடுங்
காண்சாழலோ
கலைநவின்ற பொருள்=சிவமாகிய செம்பொருள்.

இதைச் சம்பிரதாய நெறியில்தான் அறியமுடியும். சம்பிரதாய நெறியிலுள்ளோர்தான் உணர்த்தமுடியும். அத்தகைய சம்பிரதாயத்தை நிலைநிறுத்தவே திருமணம் கொண்டார் என்று கூறுகிறார். திருவுத்திர கோசமங்கையில் சுருவைப் பிடித்து வலைஞன் மகளை மணந்து 64000 சிவ யோகியருக்குத் தீக்ஷை செய்ததாகத் திருவிளையாடல் புராணம் கூறும். தக்ஷிணமூர்த்தி நால்வருக்குத்தான் உபதேசம் செய்தார். இதனை நுட்பமாக உய்த்துணரலாம். இந்த யோகம் இயற்கையுடன் பொருந்தினது.

**கோயில் என்ற சொல் பிரசாத கலைக்குப் பெயர்.** பிரசாத கலை என்பது சந்திரயோகம் 16 கலைகளையுடையது. அவைகள் முன்னர் விளக்கப்பட்டுள்ளன.

பஞ்சப் பிரமம் என்பதைக் கிரியாவாதிகள் ஐந்து முகத்தோடு கூடினதாகக் கொள்ளுகின்றனர். உண்மையில் அதன்



பொருள் வேறு. பஞ்ச என்றால் விரிந்த, பரந்த என்ற பொருள் உடையது. பஞ்சப் பிரமம் என்றால் எங்கும் விரிந்துள்ள முகங்களை உடையது என்பது பொருள். பஞ்சபாத்திரம் என்பதோடு பஞ்சானனம் என்ற பொருள்களையும் ஓர்க. பிரணவ மூர்த்தியாகிய சதாசிவம் கீழே அதோ முகத்தையும் மேலே ஐந்து முகங்களையும் தாங்கியுள்ளது இவைகளைச் சேர்த்தபோது அறுமுகச் சிவனுவர்.

அதோமுகங் கீழண்ட மான புராணன்
அதோமுகந் தன்னெடும் எங்கு முயலுஞ்
சதோமுகத் தொண்மலர்க் கண்ணிப் பிரானும்
அதோமுகன் ஊழித் தலைவனு மாமே.

திருமந்திரம் - 524

அழிகின்ற உடலில் பிரணவம் என்ற உயிர் அழியாத பொருளாக உள்ளது. அழியாததை சத் என்று சொல்லுகிறோம். சத்துப் போனவனை செத்துப்போனுன் என்கிறோம். சத்தாகிய பிரணவமூர்த்தி ஒண்மலர்க் கண்ணிப் பிரானுக உள்ளார். உடலுக்கு அழிவைச் செய்பவர் உருத்திரர். அவரே ஆக்கக் கடவுளானபோது சிவமாக்கிவிடுவர். (சதாசிவ ரூபம் என்னும் நூல் காண்க) புநர் உற்பத்தியும் காமகலையில் பொருந்தியே நடைபெறுகின்றது.

திருவாசகத்தில் கூறும் கோகழி என்பதும் கீழுள்ள அதோ முகத்தையும் மேலுள்ள ஐந்து முகத்தையும் சேர்ப்பதுதான் வழிபாட்டு நெறியாக உள்ளது. இந்த ராஜவீதி சுழுமுனை நாடியாகும்.

''கோகழியாண்ட குருமணிதன் தாள்வாழ்க''
''கோகழி மேவிய கோவே போற்றி''

இன்பந் தருவன் குயிலே ஏழுல கும்முழு தாளி
அன்பன் அமுதளித் தூறும் ஆனந்தன் வான்வந்த தேவன்
நன்பொன் மணிச்சுவ டொத்த நற்பரி மேல்வரு வானை
கொம்பில் மிழற்றுங் குயிலே கோகழி நாதனைக் கூவாய்
நண்ணிப் பெருந்துறையை நம்மிடர்கள் போயகல
எண்ணி யெழுகோ கழிக்கரசை—பண்ணின்
மொழியாளோ டுத்தர கோசமங்கை மன்னிக்
கழியா திருந்தவனைக் காண்.

கடலின்திரை யதுபோல்வரு
கலக்கம்மல மறுத்தென்
உடலும்மென துயிரும்புகுந்
தொழியாவண்ணம் நிறைந்தான்
சுடருஞ்சுடர் மதிசூடிய
திருப்பெருந்துறை உறையும்
படருஞ்சடை மகுடத்தெங்கள்
பரன்தான் செய்தபடிறே.
[உயிருண்ணிப் பத்து திருவாசகம் ஒப்பு நோக்குக.]

### ரு. பிரணவ தேகம்

சுழற்றிக் கொடுக்கவே சுத்திக் கழியுங்
கழற்றி மலத்தைக் கமலத்தைப் பூரித்து
உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு
அழற்றித் தவிர்ந்துடல் அஞ்சன மாமே. 726

அஞ்சனம் என்றால் மை. ''மை கருப்பு திக்கானையி லொன்று முப்பேர்'' சூடாமணி நிகண்டு. முன்னைய மந்திரத்தில் ''உடம்பினுள் உறுபொருள் கண்டேன்'' என்றார். அதை விளக்கவே இந்த மந்திரம் கூறுகின்றார், உடம்பினுள்ளும், உடம்பின் வெளியிலும் உள்ளது ஒரே



பொருள் ஆகாயம் ஆகும். இரண்டு நிலையிலும் உள்ள அறிவுநிலை என்ன என்பதைக் காண உண்மை விளங்கும். நான் யார்? என்ற விசாரணையைத் தொடங்கினால் முதலில் உடம்புதான் இல்லை என்றும் உடம்பிலுள்ள எந்தக் கருவியும் தானில்லை. சுமுகமாகச் சேர்ந்தும் இல்லை என்பது விளங்கும். பின்னை கண்ணைமூடி ஆராய்ந்து பார்த்தால் ஒரே இருள்தான் தோன்றும். அந்த இருள்தான் நானாகுமா? என்றால் அந்த இருளில் நிலைத்து, சிறிதுநேரம் ஆனால் அந்த இருளில் நுண்ணிய ஒளிக்கிரணங்கள் பாய்வது தெரியும். காரிருள் நிலையிலிருந்து இலகுவான இருள்நிலை வந்துவிடும். இங்கு கண்ட இருளானது எது? ஒளியாக வருவதெது? என்ற விசாரணையில் ஞானம் தொடங்குகின்றது. ஒளியைக் காண ஆசான் உதவி வேண்டும் அதைப் பின்னர் கூறுகிறார். இந்த இருள்நிலையைக் காண்பவன் தன்னுடைய உண்மைச் சொரூபம் இருள்தானா என்று ஐயப்படும்போது குரு சகாயத்தினால் ஒளி உண்டாக்கப்படுகிறது. ஆணவ மலத்தால் காண்பது இருள். அருளினால் காண்பது ஒளி என்ற உண்மை உணரலாம். குரு உணர்த்தியபோது அகக்கண் தொழிற்பட ஆரம்பிக்கின்றது.

அகக் கண்கொண்டு அறிவாராய்ச்சி தொடங்குகின்றது. 36 தத்துவங்களுடன் கூடியவன் இந்த இருளே வடிவானவன் தான் என்பதையும், அருளால் அறிந்தபின் ஒளியாக வேண்டியவன் என்பதையும் அறிகின்றான். அருள் சத்தி வியாபகமான போது சிவ வியாபகமும் உணரப்படும். அக்கினியால் சுட்டு எரிக்கப்படாமலேயே உடலைக் கரிபோன்ற வடிவில் கண்டான்.

உழற்று—வெப்பம் உண்டாக்கல்
அழற்றி—அக்கினி
இந்த உபாயம் குருவினால் காட்டப்பட்டது.

ஒளியிலும் இருளிலும் பொருந்தியுள்ளது சகஸ்ரதள கமலம். சகஸ்ரதளத்தைப் பூரிக்கச் செய்தால் மலம் கழிவுறும். சகஸ்ரதளத்தில் மனம் சுழன்று கொண்டிருந்தால் அருளான மலக்குற்றம் நீங்கும்.

இதன் பொருள் :

தவமாகிய அக்கினியை நினைத்தபோது உண்டாக்கிக் கொள்பவருக்கு உடல் அக்கினியால் சுட்டு எரித்து ஜோதியாக்காமலேயே ஜோதி சூழ்வதைக் காணலாம். இந்த ஜோதி உற்பத்தி சிரசில் உள்ள மகேஸ்வர சதாசிவ பீடத்தில் உள்ளது. இவற்றைப் பூரிக்கப் பூரிக்க ஒளி மண்டலம் பெருகி இருள் போய்விடும்.

திருவாசகம் கோயில் திருவிருத்தம் முழுமையும் இந்த ஒளியைத்தான் பேசுகிறது.

அரைசனே அன்பர்க் கடியனே னுடைய
அப்பனே ஆவியோ டாக்கை
புரைபுரை கனியப் புகுந்துநின் றுருக்கிப்
பொய்யிருள் கடிந்தமெய்ச் சுடரே
திரைபொரா மன்னும் அமுதத்தெண் கடலே
திருப்பெருந் துறையுறை சிவனே
உரையுணர் விறந்துநின் றுணர்வதோர் உணர்வே
யானுன்னை உரைக்குமா றுணர்த்தே

இதை ஒப்பு நோக்குக.

சகஸ்ரதளம் திறப்பு முதல் நிலை புருவ மத்திதான். இந்த இடத்திற்குப் பெருமை கொடுக்கவே குங்குமம், சந்தனம், சாந்து, ஜவ்வாதுப்பொட்டு எல்லாம் அணிகின்றனர் குருவும் சீடனும் கூடுமிடமும் இதுவேதான். ஒளிவிடும் முதல் நிலையும் இதுதான்.



நெற்றிக்கு நேரே புருவத் திடைவெளி
உற்றுற்றுப் பார்க்க வொளிவிடு மந்திரம்
பற்றுக்குப் பற்றுய்ப் பரம விருந்திடஞ்
சிற்றம்பல மென்று சேர்ந்துகொண் டேனே 2770

சூரிய கலையும் சந்திர கலையும் சேர்ந்தபோது அக்கினி கலை உதிக்கிறது. இந்த அக்னி கலை உதிப்பையே ஞானிகள் முதலில் காண்கின்றனர். இங்கிருந்தேதான் எட்டுத் திசையும் சுற்றிவர வேண்டும். அஷ்டதள கமலபத்மம் எட்டாம் தந்திரம் பார்த்தால் இது விளங்கும். காரிருள் நீங்கி மேக ஒளியும் பல வர்ணங்களும் பின்பு பேரொளியும் உண்டாகும். தினமும் முடிந்தவரையில் சிரசின்மேல் சென்று கவனிப்பதே அத்துவா சுத்தியாகும். அத்துவாக்கள் சுத்தியானபோது அத்துவாக்களின் இருள் தன்மை விலகும். அதுவே அவைகளின் மலம். இவையெல்லாம் தவாக்கினியைப் பெருக்கும் உபாயம் அறிவார்க்குத்தான் என்பதை "உழற்றிக் கொடுக்கும் உபாயம் அறிவார்க்கு" என்றார்.

அஞ்சனம் என்பது அஷ்டதிக்கஜங்களில் மேற்குப் பக்கம் உள்ள யானையாகும். இந்த யோகத்தில் பிடரிக்கண் முதலில் திறக்கப்படுவதால் மேற்குத் திக்கில் உள்ள யானையைக் குறிப்பிட்டார். சத்தியோஜாதம் வெளிப்படுவது மேற்குத் திக்கில் தான். இவரைப் பொருந்திதான் அமூர்த்தி சாதாக்கியம் அமைகிறது. அமூர்த்தி சாதாக்கியம் என்றால் உடலைத்தாண்டின அறிவு. ஐந்து கோசங்களிலும் உள்ள இருள் சிறிது சிறிதாக விலகிவிடும்.

ஞான யோகத்திற்கு எவ்வித உருவ வழிபாடும் இல்லை. மந்திரமும் இல்லை. குரு காட்டின குறிதான் துவக்க நிலை. பிரணவமேதான் லக்ஷியம். பிரணவம் முதலில் காரிருளாயிருந்து மேக நிறமாய் வெண்மையாகும் என்பதை உணர்த்தவே விநாயகக் கடவுளைப் பிரணவ மூர்த்தியாகக் கண்டனர்

ஔவையார் அருளிய விநாயகரகவல் சிறந்த ஞானபோதம். படித்துண்மை அறிக.

உருவரு வாவதியாதென் றுரைத்திடி னகங்காரந்தான்
மருவிய வடிவதாகும் வடிவது மறவேவிட்டால்
உருவிலாச் சத்தியத்தா லுலகெலாந் தோன்றலாலே
பொருவிலா சத்தித்தியானம் பொருந்திட
வுரைத்ததன்றே
— தேவிகாலோத்திரம்

யானெனு மதனைநீக்கி யோகமாய் நின்றஞானம்
ஆனவவ் வொளியாய்த்தோன்று மதுமுத்தி வித்துமாகித்
தேனமர் கரியகூந்தற் செய்யவாய் பரந்து நீண்ட
மானமர் விழியாய்மேலாம் யோகவத் தகமுமாமால்.
— தேவிகாலோத்திரம்

சக்கர நாடிசான்றோர் வழித் தெய்வ ரூபமுள
அக்கர மண்டலங்கண் ஞானம்போல லழகின்ருகும்
மக்கடோய் மாயார் விச்சை மந்திரம் பிராணாயாமம்
தொக்கசீர் ஞானஞ்சேரத் தொடங்குவார்
தொடங்கலாகா
— தேவிகாலோத்திரம்

மந்திரஞ் செபந்தியானம் பூசனை வணக்கம்வேண்டா
அந்தமி லாதமுத்திக் குபாயமே யறிய வேண்டும்
சிந்தனை புறமேசெல்லுற் றுயரமே திரியமீட்கின்
பந்தமாந் துன்பநீங்கிப் பரமான வின்பஞ்சேர்வார்.
தேவிகாலோத்திரம்

புறனகங் கிழ்மேல்பக்கம் புணர்வதோர் பொருளுமில்லைத்
திறனுடை யுருவமெல்லாந் தானுகித் தேகமின்ருய்



அறன்முறை யடங்குஞான யோகினு லறியப்பட்ட
விறன்மலி ஞானநந்த மேன்மையாய் விளங்காநிற்கும்.
தேவிகாலோத்திரம்

எந்த வாருயிர் யாதோர் பொருளினைச்
சிந்தையாற் பற்றிக் காரியஞ் செய்திடில்
அந்த யோனிய தாமென் றறிவினுல்
பந்த மில்பொருள் பற்றுத றக்கதே.
—தேவிகாலோத்திரம்

## 4. சிவயோக பலன்

அஞ்சனம் போன்றுட லையறு மந்தியில்
வஞ்சக வாத மறுமத்தி யானத்திற்
செஞ்சிறு காலையிற் செய்திடிற் பித்தறும்
நஞ்சறச் சொன்னேம் நரைதிரை நாசமே.
727

யானை போன்ற உடலாயினும் கபம் வந்து அடைக்குமாயில் ஒரு செயலும் செய்யமுடியாது. சாயுங்கால நேரத்தில் இந்த யோகத்தைப் பயின்றால் கபம் அகலும். மத்தியானத்திலே பயின்றால் மாறுபாட்டைச் செய்யும்; வாதநோய் அகலும். செம்மையான விடியற்காலையில் செய்தால் பித்தநோய் அகலும். செஞ்சிறு காலையில் என்பது இரவில் நான்காஞ் சாமகாலமாகும். நஞ்சுத் தன்மை உடலில் உள்ளவை கழிக்கப்படும். மூப்பின் அறிகுறியாகிய நரைதிரையும் அகலும்.

வஞ்சகம்=கொடுமை.

நஞ்சு என்பது உடலின் கேட்டை உண்டாக்கும் சுக்கிலம் என்பது சித்தர் பரிபாஷை. இந்த யோகத்தினுல் சுக்கிலம்

வற்றிவிடும். ஊர்த்துவரேதஸ் அமைய சுக்கிலம் வற்றியே ஆகவேண்டும். பின்னல் அண்டம் சுருங்கில் அதற்கோர் அழி வில்லை என்று கூறுவதைக்கொண்டும் காண்க.

மூன்று காலங்களிலும் பயின்றால் திரிதோஷங்களும் நீங்கி நோயற்று வாழ்வர் என்று கொள்ளவேண்டும்.

இடகலை பிங்கலை என்ற இரண்டு நாடிகளையும் பாம்பாக உருவகித்துள்ளார் — அவை இரண்டு என்ற உகரத்தையும், எட்டு என்ற அகரத்தையும் குறிக்கும். இந்த அகர, உகர மாகிய நாடிகள் மூன்று மடக்காக அமைந்துள்ளன. இவை பொருந்தும் வகையில் பன்னிரண்டு விரற்கடையில் சேர்ந்து சேர்ந்து பிரிகின்றன. கீழ்ப்பார்வையுடைய இரண்டு கண்களை யும் மேற்பார்வை பொருந்தும் வகையில் செய்து, அவ்விடத் தில் மனத்தை நிறுத்தினல் எடுத்த உடல் அழியாது.

விளக்கம்

அகரகலை, சந்திரன், இடநாடி, சிவம் என்பவை ஒரு பொருள்.

உகரகலை, சூரியன், பிங்கலை, வலநாடி சத்தி என்பவை ஒரு பொருள்.

1. ஆத்மா - உச்சிசிரசு.
2. புத்தி - பிடரிக்கண்.
3. மனம் - நெற்றிக்கண்.
4. தொண்டை.
5. இருதயம்.
6. உந்தி (தொப்பூழ்).
7. ஆண்குறி.
8. சுழுமுனை நாடிதுவக்கமாகிய மூலாதாரம்.



மனிதனின் உயரத்தை 96 பாகம் செய்தால், மூலாதாரத் ...ருக் கீழே பாதியும் மேலே பாதியும் அமையும் ஒருபாதிக்கு ... விரற்கடை ஆகும். 6 அடி உயரமாகக் கொண்டால் ...ரு பகுதி முக்கால் அங்குலம் அல்லது ஒரு விரற்கடை ஆகும்.

இரண்டு நாடிகளும் கால் பெருவிரல் வழியாகப் புகுந்து ...ரசை நோக்கிச் செல்கின்றன. அவை நான்கு இடங்களில் ...றி மூன்று கண்டத்தை உண்டாக்குகின்றன.

மூலாதாரமும் சுவாதிஷ்டானமும் — பிர்மக்கிரந்தி.

உந்தியும், மணிபூரகமும்
ஹ்ருதயமும்-அநாகதமும் } விஷ்ணுக் கிரந்தி.

தொண்டையும்-விசுத்தியும்
ஆக்ஞையும் -நெற்றியும் } உருத்திரக் கிரந்தி.

இவைகள் பன்னிரண்டு விரற்கடையில் உள்ளன.

சிரசின்மேல் உள்ள பன்னிரண்டு விரற்கடையோகிகளுக் ...ரிய ஸ்தானமாகும்..

இந்த முறையை ஆகமவாதிகள் வகுத்துள்ள முறை ...மே கொடுக்கப்பட்டுள்ளது.

1. மேதா கலை — நாபிமுதல் ஹ்ருதயம் வரை.
2. அர்க்கீசகலை — இருதய முதல் கண்டம் வரை.
3. விடகலை — கண்டமுதல் உண்ணுக்குப் பிரதேசம்வரை.
4. விந்துகலை — புருவமத்திமுதல் நெற்றிநடு வரையில்.
5. அர்த்த சந்திரன் — நெற்றிநடு.
6. நிரோதி — இவை ஒவ்வொன்றும் ஒவ்வொரு
7. நாதம் அங்குலம் (ஒரு விரற்கடை).
8. நாதாந்தம்

9. சத்தி — சிரசின் மேல்.
10. வியாபினி
11. சமனை
12. உன்மனை } — ஒவ்வொன்றும் நான்கு விரற்கடையாக உள்ளது.

நெற்றிநடு முதல் பிர்மப்புழை வரையில் சதாசிவ தானம். இதன் மேல் நிராதாரகலைகள் தொடங்கும். அவை வியாபினி வியோமரூபினி, அநந்தை, அநாதை, அநாசிருதை, சமனை உன்மனியாகும். இவைகள் சிவயோகத்தில் இடம் பெறுவன ஆகும். இந்த ஏழும் முன்னுள்ள ஒன்பதும் சேர்ந்து சந்திர கலை பதினாறாகும்.

நான்று என்றால் தொங்குகின்ற என்பது பொருள். பிரணவம் என்பது அ, உ, ம, விந்து, நாதம் இவ்வைந்தும் சேர்ந்த நிலை. இவையெல்லாம் சநமான்யர்களுக்குக் கீழ்முகம் கொண்டே நடைபெறுகின்றன. இந்தக் கீழ்நோக்கு கண்களிலும் அமைந்துள்ளது. முட்டை என்பது முட்டையையும் குறிக்கும் ஆகாயத்தையும் குறிக்கும். காமம் பொருந்திய போது கண்ணுக்குக் கீழ்நோக்கும், உலகநோக்கில் செல்லும் பார்வையும் சிவத்தை நோக்கியபோது ஊர்த்துவதிருஷ்டி அமையும். ஊர்த்துவதிருஷ்டி அமைவே சிவயோகத் தொடக்கம். சிவபெருமானுக்கு விருபாக்ஷன் என்ற பெயரும் உண்டு (வேறுபட்ட பார்வையுடையவன்). பார்வையை குரு காட்டிய வழியில் அமைப்பதே சிவயோக சாதனம். சதாசிவம் ஆகாய தத்துவத்திற்கு அதிபர். கண்களின் பார்வை ஆகாயக் கூறில் பதிந்தபோது கீழ்நோக்குடை யுடைய பிரணவம் மேனேக்குதலை அடைந்து மண்டலங்கள் விரியத் தொடங்கும். சதாசிவத்தில் உருவம் முடிந்து அருபம் தொடங்குகின்றது.

**சிவத்தில் எவ்வித உருவமும் இல்லை என்பதை நன்கு உணரவேண்டும்.** சிவம் எல்லாத் தத்துவங்களிலும் கலந்தி



யிருந்தாலும் கீழ் உள்ள தத்துவங்கள் சிவமாகா. ஒரு சேவகனும் அரசாங்க ஊழியன்தான். அதிகாரியும் அரசாங்க ஊழியர். இருவரும் சமமாகமாட்டார்கள். அதுபோலத்தான் சிவம் ஆகாயக் கூறில் விரிந்து எல்லாவற்றையும் தன்னுள் கொண்டுள்ளது. ஏனையோரிடமும் ஆகாயக்கூறு இருந்தாலும் கண்டநிலையில் உள்ளது அகண்ட நிலையிலில்லை.

கண்பார்வை சிரசின் மேற்பகுதிக்குப் போகும் தகுதி பெற்றவர்களுக்கு இந்திரியாதிகளின் சேட்டை விடுபட்டுவிடும். சிவயோகம் அமைந்தால் இந்திரியாதிகள் தொழிற்படாது. சிவயோகம் கண்களில்தான் தொடங்குகின்றது. **சுவாசத்திற்கும் சிவயோகத்திற்கும் எவ்வித சம்பந்தமும் இல்லை.**

ஆகாயத்தில் தான் பிறவிக்குவரவேண்டிய வித்தும், பிறவியை மாற்றவேண்டிய வித்தை வறுக்கும் நிலையும் உள்ளது என்பதை அறியவும். மேலான ஆகாயக்கூறு சிவத்தினிடமே உள்ளது. அங்கு இல்லாத ஒரு பொருள் வேறெங்கும் இல்லை. இங்கு சிவத்தைப் பற்றிய விளக்கம் அறியவேண்டியது.

சிவலிங்கம் என்ற சொற்றொடர் சிவமாகிய இலிங்கம் என விரியும். விரியுங்கால் 'சிவம்' என்னும் சொல் தன்மையும் 'லிங்கம்' என்ற பொருள் தன்மையும் குறிக்கும். குறிக்கவே லிங்கத்தின் தன்மை சிவம் எனப் பொருள்படும். உருவப் பொருள் அல்லாத சிவம் பொருளைக் குறிப்பதற்கே லிங்கம் எனப்பட்டது. இனி லிங்கம் என்பது எல்லாம் தோன்றி ஒடுங்குவதற்கு உரிய மூலம் எனவும் சித்தரித்தல் எனவும் பொருள்படும்.

எல்லாப் பொருள்களும் மங்கலத்தைக் கொடுப்பதில் தனக்குமேல் ஒரு மங்கலப் பொருள் இன்மையால் சிவம் மங்கலத்தைத் தருவது ஆகும். எல்லாப் பொருளுடனும்

கலந்தும் அவற்றின் வேருயும் **அறிவுடையதாயும் உள்ள வெளியாகும்.** ஆதலால் பரவெளியைச் சிதாகாயம் என்றும் ஞானகாயம் என்றும் கூறுவர். இப்பரவெளியோடு பிரிப்பன்றி நிற்கும் உயிர்ப் பொருளுக்கு அப்பரவெளியை அறிதலே முத்தி. உயிர்கள் உருவங்கடந்தபோது இவ்வுண்மையை உணரும். சிறப்பான வழிபாடுடையார்க்குப் பரவெளியாகிய சிவம் என்ற எண்ணம் தோன்றும். பரவெளி இயல்பாகவே உள்ளபடியால் **சுயம்புலிங்கம்** என்ற பேருடையது.

பூதவெளியாகிய ஆகாயம் உயர்ந்தும் அகன்றும் தோற்றுவதால் லிங்கத்தின் மேல்பாகம் உயர்ந்தும் அடிப்பாகம் ஆவுடையார் விரிந்து வட்டமாகவும் அமைந்துள்ளது. பிரணவமும் பிருதிவி, அப்பு, தேயு, வாயு, ஆகாயம், அக்கினி, சூரியன், சந்திரன் என்ற எட்டு நிலையையும் தன்னுள் கொண்டது போன்ற வடிவுடைய அண்டமாகிறது. அத்தகைய அண்டத்திற்கு மேல் முகடு திறக்க மக்களிடையேயுள்ள கண்களே தான் சாவியாக உள்ளன. இவ்விதமான எட்டுநிலை மனிதனிடம் உள்ளது. இந்த எட்டையும் அல்லாத ஒரு தனி நிலையும் ஆன்மாவுக்கு உள்ளது. அது தாரகை என்ற பேரால் அழைக்கப்படுகிறது.

இவ்வகையான எட்டு நிலைகளும் வளர்ந்து விரிந்த நிலை தான் சிவலிங்கம். **கோயிலில் தாபித்துள்ள தாவரலிங்கமல்ல** என்பதை உணரவும்.

மலர்ந்த வயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே.

திருமந்திரம் 1776



மேவி யெழுகின்ற செஞ்சுட ரூடுசென்
ருவி எழுமள வன்றே உடலுறவு
மேவப் படுவதும் விட்டு நிகழ்வதும்
பாவித் தடக்கிற் பரகதி தானே. 1777

**கண்களால் சாதனம் என்பதற்கு மேற்கோள்**

எண்ணு யிரத்தாண்டு யோக மிருக்கினும்
கண்ணூர் அமுதினைக் கண்டறி வாரில்லை
உள்நாடிக்கு உள்ளே ஒளிபெற நோக்கினுற்
கண்ணுடி போலக் கலந்து நின்ருனே. 603

நாட்ட மிரண்டும் நடுமூக்கில் வைத்திடில்
**வாட்டமு மில்லை மனைக்கும் அழிவில்லை**
ஓட்டமும் இல்லை உணர்வில்லைத் தானில்லை
தேட்டமும் இல்லை **சிவனவ னுமே.** 604

நயன மிரண்டும் நாசிமேல் வைத்திட்
டுயர்வெழா வாயுவை உள்ளே அடக்கித்
துயரற நாடியே தூங்கவல் லார்க்குப்
பயனிது காயம் பயமில்லைத் தானே.

திருமந்திரம் 605

சிந்தனைநின் றனக்காக்கி நாயி னேன்தன்
கண்ணிணைநின் திருப்பாதப் போதுக் காக்கி
வந்தனையும் அம்மலர்க்கே யாக்கி வாக்குன்
மணிவார்த்தைக் காக்கிஐம் புலன்க ளார
வந்தனைஆட் கொண்டுள்ளே புகுந்த விச்சை
மாலமுதப் பெருங்கடலே மலையே யுன்னைத்
தந்தனைசெந் தாமரைக்கா டனைய மேனித்
தனிச்சுடரே யிரண்டுமிலித் தனிய னேற்கே.

திருவாசகம்

" ஆர்மின் ஆர்மின் நாண்மலர்ப்பிணையலில்
தாள்தளை யிடுமின்
சுற்றுமின் சூழ்மின் றொடர்மின் விடேன்மின்
பற்றுமின் னென்றவர் பற்றுமுற் றொளித்தும்
தன்னே ரில்லோன் றானே யானதன்மை "

– திருவாசகம்

இந்த அப்பியாசத்திலுல் குண்டலினியும் பிராணனும் மேல்நோக்கிப் பிரமரந்திரத்தை அடைந்து பிறகு குண்டலினியும் பிராணனும் வெளியேறிவிடுவதில் கேவல கும்பகம் அமைவுறும். இதன் அருமையை, செத்திலாப் பத்து திருவாசகம் பார்த்தறிக.

## 6. நீண்ட வாழ்வு

நூறும் அறுபதும் ஆறும் வலம்வர
நூறும் அறுபதும் ஆறும் இடம்வர
நூறும் அறுபதும் ஆறும் எதிரிட
நூறும் அறுபதும் ஆறும் புகுவரே.

(729)

நூறு நாடிகள் சிரசிலிருந்து கீழ்நோக்கியும் ஒரு நாடி மேல்நோக்கியதாகவும் உள்ளது. ஊர்த்துவமுகமாயுள்ள நாடி பக்குவம் பெற கீழ்நோக்கிய நூறு நாடிகளும் அவைகளின் சுபாவம் மாறவேண்டும். அதுபோலவே தத்துவம் 96-ல் அகதத்துவம் 36 போக புறதத்துவம் அறுபதும் மாற வேண்டும். அத்துவாக்கள் ஆறும் மலக் குற்றங்கள் நீங்க வேண்டும். இடகலை பிங்கலை சுழிமுனை நாடிகள் வழியாக இவைகள் சுத்தமாக வேண்டும். இவ்விதமாக இவை சுத்தமானபோது பிரணவம் பரிசுத்தம் ஆய்விடும். இதன்





...க்கம் திருமந்திரம் சிவாதித்தன் என்ற தலைப்பு பார்த்...யலாம்.

...ாதித்யன்

அன்றிய பாச இருளுமஞ் ஞானமுஞ்
சென்றிடு ஞானச் சிவப்பிர காசத்தால்
ஒன்று மிருசுட ராம்அரு ளுேதயந்
துன்றிருள் நீங்குதல் போலத் தொலைந்ததே. 2001

கடங்கடந் தோறுங் கதிரவன் தோன்றில்
அடங்கிட மூடில் அவற்றில் அடங்கான்
விடங்கொண்ட கண்டனு மேவிய காயத்
தடங்கிட நின்றதும் அப்பரி சாமே. 2002

தானே விரிசுடர் மூன்றுமொன் றாய்நிற்குந்
தானே யயன்மா லெனநின்று தாபிக்குந்
தானே யுடலுயிர் வேறன்றி நின்றுளன்
தானே வெளியொளி தானிருட் டாமே. 2003

தெய்வச் சுடரங்கி ஞாயிறுந் திங்களும்
வையம் புனல்அனல் மாருதம் வானகஞ்
சைவப் பெரும்பதி தாங்கிய பல்லுயிர்
ஐவர்க் கிடமிடை யாறங்க மாமே.

ஆறு என்பது ஆதாரம் ஆறும் இங்கே இல்லை என்றறிய ...ண்டும். யோகிக்கு ஆறு ஆதாரங்களும் சகஸ்ரதளமும் ... ஆதாரங்களும் தொழிற்படும். சுத்தமாக வேண்டியது ...துவாக்களே ஆகும்.

மலர்ந்த வயன்மால் உருத்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தருஞ் சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. 1776

## 7. யோக நெறி அல்லது சிவ வெளிப்பாடு

சத்தியார் கோயி லிடம்வலஞ் சாதித்தால்
மத்தியா னத்திலே வாத்தியங் கேட்கலாந்
தித்தித்த கூத்துஞ் சிவனும் வெளிப்படுஞ்
சத்தியஞ் சொன்னோஞ் சதாநந்தி ஆணையே.

சத்தியார் கோவில் என்பது சகஸ்ரதளபத்மமாகும். அ அதோமுகம் கொண்டது ஒன்றும் ஊர்த்துவமுகமா ஒன்றும் உள்ளது. இரண்டும் ஒரே இடம்தான். அதே முகமாக இருந்ததேதான் ஊர்த்துவமுகமாகி நிமிர்ந் சிரசில் தாம்பாளம் வைத்ததுபோல அமையும். அ இடக் கலையை வலப்புறமாக நடத்தினால் நாதமுழக் உதித்துவிடும். இதை முதலில் இரவில் சுலபமாக அறி லாம். சிறிது நாள் சாதனத்தில் மத்தியானத்தில்கூட கருத்தில் புலப்படும். இதுவே யோகிக்குள்ள தியான நி

அங்கு ஒரு ஆனந்தமும் உண்டு. ஆகாயத்தை அறி அதன் இயல்பாகிய சத்ததன் மாத்திரை துணை செய்கின்ற

ஆகாய பூதநாயகர் சதாசிவர். இவரை அறிய ஆகாய தில் சம்மியம் செய்ய வேண்டும். ஆகாய சம்மியத்தி சத்தமே உதவிசெய்வது. சத்தத்தில் மனம் பதிவுண்டா சித்தம் சிவமாய்விடும். சித்தம் சிவமயமானபோது ஜீவ சிவனுவர். இது உண்மையான யோகநெறி. இதில் சிறி கூட சந்தேகம் வேண்டாம் என்று சிவத்தின் மேலா யிட்டுச் சொல்லுகிறுர்.

இங்கு உதிக்கும் கோஷத்தைப் பிரணவ கோஷம் என் சொல்வர். பிரணவம் சைவ மயிகளால் கூறப்படும் 22 புவனங்களையும் ஊடுருவி நிற்பது. பிரணவத் தலைவி ஓங்கா



இதை நாதம் என்றும் சொல்வர். பிரணவத் தலைவன் சிவம். சிவா, சிவை என்ற பேருக்குடையவள் பராசக்தியே தான். அதுபோல இடது கலைக்குரிய சிவமும் பிங்கலைக்கு உரிய சக்தியும் பொருந்தினபோது இந்த கோஷம் அமையும்.

" மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும் தனுமேவுமே"
திருமந்திரம்—2135

" அல்லல் களைந்தே அருள் வழிகாட்டிச்
சத்தத்தி னுள்ளே சதாசிவங் காட்டிச்
சித்தத்தி னுள்ளே சிவலிங்கம் காட்டி "

விநாயகரகவல்

அண்டங்கள் ஏழினுக் கப்புறத் தப்பான்
உண்டென்ற சத்தி சதாசிவத் துச்சிமேற்
கண்டங் கரியான் கருணை திருவுருக்
கொண்டங் குமைகாணக் கூத்துகந் தானே. 2732

சத்தம் என்பது சாந்தியதீத கலையில் பொருந்தும் ஆன் மாக்கள் நுகரும் சூக்குமபூதம். இச் சூக்கும பூதமும் தூல பூதமுமான ஆகாயமும் வானமண்டலத்திலுள்ளன. இம் மண்டலத்திற்கு அதிகாரியான சதாசிவர் ஆங்குள்ள உயிர்கட்குப் புறத்தே சத்தமாக உள்ளார். சத்தம் என்பது சூக்கும வாக்கு உள்ளடங்கின ஓசை. இவ்வோசை இயக்கம் சதாசிவரது நிலையாகும். இவ்வோசையில் மனம் பதியுண்ட போது ஆனந்தத்தோடு உள்ளபடியால் புறநிலை உலகம் மறந்துவிடும். இவ்வோசையே மனத்தில் இடங்கொண்டு சித்தத்தைப் பரிசுத்தப்படுத்திச் சிவமயமாக்கிவிடும். ஆகவே சத்தத்தையும், சத்த மனம் பொருந்திய இடத்தையும் சிவன் என்றே கொண்டார்.

சத்தமுஞ் சத்த மனமும் மனக்கருத்
தொத்தறி கின்ற விடமு மறிகிலர்
மெய்த்தறி கின்ற விடமறி வாளர்க்கு
அத்த னிருப்பிட மவ்விடந் தானே. 1973

அவ்வொடு சவ்வென்ற தரனுற்ற மந்திரம்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிகிலர்
அவ்வொடு சவ்வென்ற தாரும் அறிந்தபின்
அவ்வொடு சவ்வும் அனுதியு மாமே. திருமந்திரம். 957

## 8. யோகத் திறன்

திறத்திறம் விந்து திகழு மகாரம்
உறப்பெற வேறினைந் தோதும் சகாரம்
மறிப்பது மந்திர மன்னிய நாத
மறப்பெற யோகிக் கறநெறி யாமே. 731

திறத்திற்றிறமாகியது ஒளியுடன் கூடிய அகரகலை. அதை உறுதிப்படுத்துவது ஸகாரம் என்ற அகரத்தின் சத்தியை. அதனுடன் ஒன்றுபடுத்தும்போது உதிக்கும் நாதமே யோகிக்கு வழிபாட்டுக்குரிய மூர்த்தியாகும். சதா இந்த நினைவிலிருப்பதே யோக தர்மமாகும்.

ஹம் என்ற சொல் தமிழில் அம் ஆயிற்று. ஸம் என்றது சகாரமாயிற்று. இரண்டும் ஹம்சம் என்றால் பிராணன் என்ற பொருள். இந்தப் பிராணன் தொண்டையிலிருந்து உதித்து சதாசிவத்தானமாகிய சிரசில் படரும்போது நாதம் உதித்தெழும்.

உச்சியில் ஓங்கி ஒளிதிகழ் நாதத்தை
நச்சியே இன்பங்கொள் வார்க்கு நமன்இல்லை
விச்சும் விரிசுடர் மூன்றும் உலகுக்குத்
தச்சு மவனே சமைக்கவல் லானே. 442



இதைத்தான் ஹம்சவித்தை என்றும் ஜபியாத மந்திரம் என்றும் பிரணவ யோகம் என்றும் கூறுவது.

திருவம்பலச் சக்கரம் 951 முதல் 964 முடிய உள்ள வற்றைப் பார்த்தறிந்து கொள்க.

## 9. ஆன்மா சிவமாதல்

உந்திச் சுழியி னுடனேர் பிராணனைச்
சிந்தித் தெழுப்பிச் சிவமந் திரத்தினால்
முந்தி முகட்டின் நிறுத்தி யபானனைச்
சிந்தித் தெழுப்பச் சிவனவ னாமே. 732

இந்த மந்திரத்தினல் ஹம்ச வித்தையை எழுப்பும் முறையைக் கூறுகிறார். முதலில் பிராணனை எழுப்பிக் கொள்ள வேண்டும். அதன் பிறகு அபானனை எழுப்ப வேண்டும் என்று விளக்குகிறார். பிராணனின் நிலை சூரியன் போன்றது. சூரியன் ஆதிக்கமுள்ள வலது நாடியில் இயங்கு வது. சிவமந்திரம் என்பது பேசாத பிரணவம் அல்லது அசபையாகும். இதன் துணைகொண்டு சிரசின் உச்சியை அடையவேண்டும். (முகடு..மலையினுச்சி, வீட்டினுச்சி விட்டம், உச்சி.) இது வரையில் குருவினால் செய்யப்பட்ட முதல் தீக்ஷைநிலை.

மேலே விளங்கிய பிராணனை அபானன் நிலைகொண்ட மூலாதாரத்திற்குக் கொண்டுசெல்வது இரண்டாம் தீக்ஷை யாகும். உலகில் முருக வழிபாட்டில் தெய்வயானை திருமணம் என்று ஒன்று உள்ளது. தெய்வீகமான பிரணவம் உதித்து உந்திக்கமல முதல் உச்சிவரையில் வேல்போன்ற உருவத்தில் இணைக்கப்பட்ட சக்தி. முதல் தீக்ஷையால் ஒளிமண்டலம் பெருகுவதுடன் மனமும் ஓரளவு அடங்கும்.

முன்பக்கம் உள்ள புருவ நடுவிலிருந்து சிரசின் உச்சியும் பிடர்க்கண்ணும் தொழிற்படும். இந்தநிலைவரை மனப் பண்புக்கேற்ப மூன்று வாரத்திலிருந்து மூன்று மாதமோ அதற்கு மேலோகூட ஆகிறது. பின் மூளை சுமார் 10 நிமிடமாவது கவனிக்கத் திறம் வந்தபிறகு அடுத்த தீக்ஷைக்குச் செல்லவேண்டும்.

இரண்டாந் தீக்ஷை முருகன் வள்ளி திருமணம்போல அமையும். சூக்ஷ்மப் பொருளும் உணரத்தக்கது. மான் என்றது பிருகிருதிமாயை; மானின் பெண் குண்டலினி சக்தி; தாழ்ந்த ஜாதி. மாமிசத் தொடர்பில் உள்ள விருப்பம்; திருமணத்தின் பிறகு வள்ளி வலப்புறமும் தெய்வானை இடப்புறமும் கொண்டது. சந்திரகலை தென்புறமிருந்து வடக்காகிய இடதுபக்கம் சென்று ஜீவனைப் பரிசுத்தம் செய்தல் இதன் ரகசியம்.

தானவ ளுகிய ஞானத் தலைவனை
வானவ ராதியை மாமணிச் சோதியை
ஈனமின் ஞானத் தின்னருட் சக்தியை
ஊனமி லாள்தன்னை யூனிடைக் கண்டதே. 2324

**மூன்றுந் தீக்ஷையில் பிராணனையும் அபானனையும் சேர்க்கும் முறை** உணர்த்தியபோது நேரே மூலாதாரத்திலுள்ள சிவசக்தித் தன்மையான பிராண அபான சேர்க்கையில் மேலே எழுந்துவிடும். இதனல் மேலுள்ள ஐம்முகங்களும் கீழுள்ள அதோ முகமும் சேர்க்கப்பட்ட மூர்த்தமாயிற்று. சிவத்திற்கு முன் உதிக்கும் நிலைகள் இவைகள் என்பதைக் காண்க. இந்தத் தீக்ஷைக்குப் பிறகு உணர்வு சிறிது சிறிதாக வலப்புறமிருந்து இடப்புறம் போய்த் தங்கும். அங்கிருந்து பிர்மரந்திரம் உணர்வு பாயும்போது ஒரு இன்பநிலை உதித்து விடும். மனம் கருவிவழிச் செல்லாது



தோத்திரம் மந்திர செபம் ஒன்றும் செய்யமுடியாது. செய்தால் அவ்வின்பம் விடுபடும். செய்யாது நின்ருல் அவ்வின்பம் கால அளவின்றி நிறுத்தலாம்.

இதுதான் பொன்னம்பலம் என்று திருமந்திர ஆசிரியர் கூறுவதைக் காண திருமந்திரம் கீழே கொடுக்கப்பட்டுள்ளது.

ஆறு முகத்தில் அதிபதி நானென்றுங்
கூறு சமயக் குருபரன் நானென்றுந்
தேறினர் தெற்குத் திருஅம் பலத்துள்ளே
வேறின்றி யண்ணல் விளங்கி நின்ருனே. 2758

அம்பலம் ஆடரங் காக அதன்மீதே
எம்பரன் ஆடும் இருதாளி னீரொளி
உம்பர மாம்ஐந்து நாதத்து ரேகையுள்
தம்பத மாய்நின்று தான்வந் தருளுமே. 2759

ஆடிய காலும் அதிற்சிலம் போசையும்
பாடிய பாட்டும் பலவான நட்டமுங்
கூடிய கோலங் குருபரன் கொண்டாடத்
தேடியு ளேகண்டு தீர்ந்தற்ற வாறே. 2760

இருதயந் தன்னில் எழுந்த பிராணன்
கரசர ணுதி கலக்கும் படியே
அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனுய் எங்கணுங் கூத்துகந் தானே. 2761

குறிப்பு :—

" அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன்
குரவனுய் எங்கணுங் கூத்துகந் தானே "
" அரதன மன்றினின் மாணிக்கக் கூத்தன் " என்பது

செவ்வொளியுடன் கூடிய ஆகாயம் பொருந்தியுள்ள இடம். அதாவது மூலாதாரச் சக்கிரமும் சுவாதிஷ்டான சக்கரங்களும் ஆகும். இங்குதான் குண்டலினியும் சிவமும் பொருந்தியுள்ள கீழ் ஆதாரச் சக்கரம் . இதைக் குருவினுல் திறந்துவிட்டபோது மேல் துருவமும் கீழ்த் துருவமும் இணைப்பு உண்டாகிறது. இதன் வியாபகத்தினுல் உடல் மாற்றம் அமைய ஆரம்பித்துவிடும். சிரசில் நாதம் என்ற பிரணவ கோஷம் அமைந்துவிடும். சாதகனுக்கு தியானக் குறி நாதந்தான். இதன் வழியே சென்ருல் ஆகாயக்கூறில் சிவத்துடன் பொருந்துவதை ஜீவன் நன்ருக உணரமுடியும். சுயம்பு மூர்த்தியாகிய பரனும் சுயம்பு சத்தியாகிய பரையும் 36 தத்துவக் கூட்டத்தினின்று ஆன்மாவும் ஒன்ருக இணைந்து நிற்கும் நிலேயேதான் சோமஸ்கந்த வடிவின் உள்ளுறைப் பொருள்.

நந்தியை எந்தையை ஞானத் தலேவனே
மந்திர மொன்றுள் மருவி யதுகடந்
தந்திர வானத்தின் அப்புறத் தப்பர
சுந்தரக் கூத்தனே என்சொல்லு மாறே. 2801

சீய குருநந்தி திருஅம் பலத்திலே
ஆயுறு மேனியை யாரும் அறிகிலர்
தீயுறு செம்மை வெளுப்பொடு மத்தன்மை
ஆயுறு மேனி அணேபுக லாமே. 2802

தானுன சத்தியுந் தற்பரை யாய்நிற்குந்
தானும் பரற்கும் உயிர்க்குந் தகுமிச்சை
ஞானுதி பேத நடத்து நடித்தருள்
ஆனல் அரனடி நேயத்த தாமே. 2803

**சாக்த தந்திரமும் கூறுவதிதுவே**

மூலமணி பூரகத் தோடிலிங்க மார்பு
முதுகளம் விற்புருவநடு மொழிவதாறு



**ஞாலமு மென்புனலும் அனற்பிழம்புங்காலும்**
நாதமுறு பெருவெளியு மனமுமாக
**மேலனுகிக்குலபதத்தைப் பின்னிட்டப்பால்**
**மென்கமலத் தாயிரந்தோட் டருண பீடத்து**
**ஆலவிடம் பருகியதன் கொழுந ரோடும்**
**ஆனந்த முறும்பொருளே யறிய லாமே.**
**ஆனந்தலஹரி 9**

1. இந்த **ஷட்சக்கிர** பேதனம்தான் அந்தரியாகம் **என்று சமயிகளால்** கூறப்படுவது. மூலாக்கினி பிரகாசிக்கும் **கண்டம்** மூலாதாரமும் சுவாதிஷ்டானமும் ஆகும். அக்கினி **கண்டம்** பிர்மக் கிரந்தி.

2. மணிபூரகம் அநாகதம் அறிவாகிய சூரியன் **பிரகாசித்துக்** கொண்டுள்ளது. சூரிய கண்டம் விஷ்ணுக் **கிரந்தி.**

3. விசுத்தி ஆக்ஞை. சோமகண்டம் சந்திர கலாயுக்த **மான உருத்திரக் கிரந்தி.**

4. இவைகளுக்குமேல் மாயா தத்துவம், சுத்தவித்தியா தத்துவம் மகேஸ்வரதத்துவம் சதாசிவ தத்துவம் என்றவை **களைச்** சேர்க்க பத்து ஆதாரங்களாகிவிடும். இவைகளைத் **துரிய கண்டம்** என்றழைப்பர். இதன்மேல் உள்ள ஏழு **கலைகளையும்** சேர்க்க சம்பூரண கலைகளான பதினறு கலை **களோடு** கூடிய சோமமண்டலம் அமையும்.

**கீழுள்ள ஆறு** ஆதாரத்தையும் அதன்மேலுள்ள நாலு **ஆதாரத்தையும்** சேர்ப்பதற்கு **மஹாவேதா** என்பது பெயர்.

**குண்டலினி சக்தியை** குலாங்கனேயென்றும் ஷட்சக்கிரங் **களடங்கிய சுழுமுனே** மார்க்கத்தை **குலபதம்** அல்லது **ராஜ**

**வீதி** என்றும் கூறுவர். லலிதா **சஹஸ்ரநாமம் 90** முதல் 111 வரையில் காண்க. (இவைகள் பின்னால் கொடுக்கப் பட்டுள்ளன. (குண்டலிசத்தியானவள் மூலாதாரத்திலிருந்து கிளம்பும்போது பிறந்த குழந்தைபோல் சப்தம் செய்வதால் அங்கே **குமாரி** என்றும் சூரியகண்டத்தின் முடிவாகிய அஞகதத்தைவிட்டுக் கிளம்பும்போது அந்த சூரியனின் உஷ்ணத்தால் பக்குவம் ஆகித் தருந்த வயதுள்ளவளாய்த் **தருணி** என்றும் சகஸ்ரார பத்மத்தில் தன்பதியாகிய பரம சிவனை அடைவதால் அங்கே பதிவிரதை என்றும் சொல்லப் படுவது வழக்கம்.

'' மூலமணி பூரகத் தோடிலிங்கம்'' என்று மூன்றையும் சேர்த்துள்ளது கவனிக்கத்தக்கது. இவை மூன்றும் சேர்ந்து தான் பிரணவத்தின் கீழ்த்துருவம் அமைகிறது.

இவ்வகையாக ஒன்றுனபோது பழைய நிலையிலிருந்த பிர்மன், விஷ்ணு, உருத்திரன், மாகேசன், சதாசிவம், விந்து, நாதம், சத்தி, சிவம் என்ற ஒன்பது நிலைகளும் மாறி பூரணத்துவம் பொருந்திய சிவமாக ஜீவனுகின்றுன்.

மலர்ந்த வயன்மால் உருந்திரன் மகேசன்
பலந்தரும் ஐம்முகன் பரவிந்து நாதம்
நலந்தரு சத்தி சிவன்வடி வாகிப்
பலந்தரு லிங்கம் பராநந்தி யாமே. 1776

90. குலாம்ருதைக ரசிகாயை - குலாம்ருதத்தில் ரசிப் பவள்.

91. குலஸங்கேத-பாலின்யை - குலசம்பநதமான ரகசியங்களைக் காப்பவள்.

92. குலாங்கஜயை - குலஸ்திரி போன்றவள்.



93. குலாந்தஸ்தாயை-குலம் என்னும் திரிபுடி யினுள் (ஞேயம்) அறியத்தக்கதாக இருப் பவள்.

94. கௌலின்யை- சிவமும் சக்தியும் சேர்ந்த வடி வினள் (குலம் என்றால் சத்தி: அகுல என்றால் சிவன்).

95. குலயோகின்யை - குலத்துடன் சம்பந்தமுடை யவள்.

96. அகுலாயை - குலத்துக்கப்பாலிருப்பவள்.

97. ஸமயாந்தஸ்தாயை-இருதயத்தில் சிவனையும் சக்தியையும் உபாசிப்பது சமயமதம் எனப்படும்.

98. சமயாசார தற்பராயை - கிரியை வழியிலுள் ளோர் மூலாதாரம் முதலாக பாவனையில் பூஜை செய்பவர்கள். அவ்வித சமய பதத்தில் பிரிய முள்ளவள்.

99. **மூலாதாரைக நிலயாயை** - மூலாதாரத்தில் முக் கிய மாயுறைபவள்.

100. ப்ரஹ்மக்ரந்தி விபேதின்யை - பிர்மக் கிரந்தி யைப் பிளப்பவள்.

101. மணிபூராந்த வதியாயை - மணிபூரக ஸ்தானத் தில் காட்சியளிப்பவள்.

102. விஷ்ணுக் கிரந்தி விபேதின்யை - விஷ்ணு முடிச் சைப் பிளப்பவள்.

103. ஆக்ஞா சக்ராந்தராலய தாயை - புருவ மத்தி யில் ஆக்ஞா சக்கரத்தின் நடுவில் உள்ளவள்.

104. ருத்திரக்ரந்தி விபேதியை - ருத்திரக்ரந்தியைப் பிளப்பவள்.

105. ஸஹஸ்ராராம்புஜா ரூபாயை - ஸகஸ்ராரச்சக்க ரத்திலேறி யிருப்பவள்.

106. ஸுதாராபி வர்ஷிண்யை - ஸுதா என்னும் அமிருதத்தைப் பெருகும்படி செய்பவள்.

107. தடில்லதா சமருச்யை - மின்னல் கொடிபோல் பிரகாசிப்பவள்.

108. ஷட்சக்ரோவரி ஸமஸ்திதாயை - ஆறு சக்கரங்களுக்கும் மேலிருப்பவள்.

109. மஹாசக்த்யை - பக்தர்களிடம் மிகுந்த பிரிய முள்ளவள்.

110. குண்டலின்யை - குண்டலினிரூபமாக உள்ளவள் - பாம்புபோல் மூச்சு விட்டுக்கொண்டிருப்பவள். அதனால்தான் சிவாபரணம் எங்கும் பாம்பாயிற்று.

111. பிஸதந்து தநீயஸ்யை - தாமரை நூல்போல் மெல்லியவள்.

## 10. இறையுறையிடம்

மாறு மலக்குதந் தன்மே லிருவிரற்
கூறு இலிங்கத்தின் கீழே குறிக்கொண்மின்
ஆறு உடம்பிடை அண்ணலும் அங்குளன்
கூறு உபதேசங் கொண்டது காணுமே.

நீங்காத மலம் பொருந்திய குதத்திற்கு இரண்டு விரற்கடை மேலும், வாயிட்டுச் சொல்லமுடியாத ஆண்பெண்பால் இனக் குறிக்குக் கீழேயும் உள்ள மூலாதாரச் சக்கிரத்தில் தியானம் செய்யுங்கள். உடம்பையே வழியாகக் கொண்டு ஜீவர்களை நடத்தும் சிவம் அங்குள்ளது. இந்த



உபதேசம் சம்பிரதாய நெறிப்படி காப்பாற்றப்பட்டு வருகிற இரகசிய உபதேசம் ஆக உள்ளது.

மூன்றும் தந்திரடுதில் பிரத்தியாகாரம் என்ற தலைப்பில் வருவதும் காண்க.

எருவிடும் வாசற் கிருவிரற் மேலே
கருவிடும் வாசற் கிருவிரற் கீழே
உருவிடுஞ் சோதியை உள்கவல் லார்க்குக்
கருவிடுஞ் சோதி கலந்துநின் றானே. 584

மூலத் துவாரத்தை மொக்கர மிட்டிரு
மேலைத் துவாரத்தின் மேல்மனம் வைத்திரு
வேலொத்த கண்ணை வெளியில் விழித்திரு
காலத்தை வெல்லும் கருத்திது தானே. 583

### தாரணை தலைப்பு

கோணு மனத்தைக் குறிக்கொண்டு கீழ்க்கட்டி
வீணுத் தண்டூடே வெளியுறத் தானேக்கிக்
காணுக்கண் கேளாச் செவியென் றிருப்பார்க்கு
வாணுள் அடைக்கும் வழியது வாமே. 588

காலசம்காரம் இன்ன தென்றது :—

மூலத் துவாரத்து மூளும் ஒருவனை
மேலைத் துவாரத்து மேலுற நோக்கிமுற்
காலுற்றுக் காலனைக் காய்ந்தங்கி யோகமாய்
ஞாலக் கடவூர் நலமா யிருந்ததே. 345

மலையார் சிரத்திடை வானீர் அருவி
நிலையாரப் பாயும் நெடுநாடி யூடே
சிலையார் பொதுவில் திருநட மாடுந்
தொலையாத ஆனந்தச் சோதிகண் டேனே. 589

மேலை நிலத்திருள் வேதகப் பெண்பிள்ளை
மூல நிலத்தில் எழுகின்ற மூர்த்தியை
ஏல எழுப்பி இவளுடன் சந்திக்கப்
பாலனும் ஆவான் பார்நந்தி ஆணையே. 590

கடைவாச லைக்கட்டிக் காலை எழுப்பி
இடைவாசல் நோக்கி இனிதுள் இருத்தி
மடைவாயிற் கொக்குபோல் வந்தித் திருப்பார்க்
குடையாமல் ஊழி யிருக்கலு மாமே. 591

## 11. நரைதிரை வாராத சத்திநிலை

நீல நிறனுடை நேரிழை யாளொடுஞ்
சாலவும் புல்லிச் சதமென் றிருப்பார்க்கு
ஞாலம் அறிய நரைதிரை மாறிடும்.
பாலனு மாவர் பராநந்தி யாணையே. 734

ஆகாய மண்டலம் நீல நிறம். நெற்றி நடு அர்த்த சந்திரன் உதிப்பு நிலை. சமுத்திர நீலம் போன்ற ஒளி காணப் படும். காசம்பூ காக்கரட்டான் பூப்போன்ற நீலவொளி பகல் என்றும் இரவென்றும் வேறுபாடு இல்லாமல் சாதகன் மூன்று தீட்சைக்குப் பிறகு பார்க்க முடியும். பகலில் இளநீலமாய்க் காணும். இந்தச் சத்தியோடும் எப்போதும் பொருந்தி அவளையே அடைக்கலமாகக் கொண்டவர்க்கு உலகோர் காணும் வகையில் நரைதிரை மாறிவிடும். நரைதிரை மாறுவதினுல் இளமைத் தோற்றம் வந்துவிடும். ''இதில் சிறிதும் சந்தேகப் படவேண்டாம் சிவன் மேலாணை'' என்று அறுதியிடுகிருர்.

ஆகாயம் உடலில்லாத சத்தி. சாதகனும் உடலில்லாது உடலுக்கு மேற்பட்டு நின்று தான் உடலில் கட்டுப்பட்டுள்ள வன் அல்லன் என்பதை உணர்ந்தபோது சாதகனும் ஆகாய வடிவில் தொழிற்படத் தகுதி பெறுகிருன். ஆகாய மண்டலத்



தியானம் பாவிப்பதால் வருவதில்லை. அருள் என்ற சத்திக் கலப்பாலேயே அமையவேண்டும் செந்நெறி கண்டோர்கள் எல்லாரும் இவ்வழியே பின்பற்றுகின்ருர்கள். எல்லா மதங் களின் பெரியோர்களும் இந்த நிலையை அடைந்துள்ளார்கள்.

வானம்போல வடிவிலதா யெங்கும்
ஆனதாகத் தியானம் பண்ணுதவன்
கானகந் தன்னி லுலண்டெனக் கட்டுப்பட்
டீன மான பிறப்பிறப் பெய்துமே.
—தேவிகாலோத்திரம்

**குறிப்பு :** உலண்டு என்பது காட்டில் உள்ள ஒரு வண்டு. அதன் எச்சிலை நூலாக்கித் தன்னைச் சுற்றிக்கொண்டு வெளி யேற வழியறியாது இறந்து விடுகிறது. அதுபோல் மனிதன் பலவித உலகாசையால் தன்னைப் பாசமான நூல் கட்டிக் கொண்டு இறப்பையும் பிறப்பையும் விடாது தொடர்ந்து வரும்படி செய்து கொள்ளுகிருன்.

மேலாய விண்பமாகி விண்போலும் புறம்பதாகிக்
காலாதி தத்துவங்கள் கலவாது காயமின்றி
மாலாய கரணமின்றி யறிவாகி யெங்கும்காணும்
சீலாய ஞானஞ் சேர்ந்தோர் திரியாவா நந்தியாவர்
—தேவிகாலோத்திரம்

உடம்பி ரண்டு முயிர்ப்புட னுள்ளமும்
மடம்ப டுமகங் காரமும் புந்தியும்
திடம்ப டந்தனில் வேறெனச் சிந்திப்பான்
உடம்பி லாஞான வுள்ளொளி யுள்ளுறும்
—தேவிகாலோத்திரம்

இந்த நீலவொளி கிடைக்கப் பெற்றோரைத் திருமூலர் தீவிர சத்தினிபாதம் பெற்றவர் என்று சத்தினிபாதத் தலைப் பில் கூறுகிருர். (5ம் தந்திரம்).

தாங்குமின் எட்டுத் திசைக்குந் தலைமகன்
பூங்கமழ் கோதைப் புரிகுழ லாளோடும்
ஆங்கது சேரும் அறிவுடை யார்கட்குத்
தாங்கொளி நீலந் தொடர்தலு மாமே. 1525

இந்த வித்தையை உலகுக்கு அளிக்கவேதான் தென்னாடு போந்ததாகத் திருமூலர் கூறுகிறார்.

மாலாங்க னேயிங்கு யான்வந்த காரணம்
நீலாங்க மேனியள் நேரிசையா ளொடு
மூலாங்க மாக மொழிந்த திருக்கூத்தின்
சீலாங்க வேதத்தைச் செப்பவந் தேனே. 77

## 12. யோக நெறியின் பயன்

அண்டஞ் சுருங்கில் அதற்கோர் அழிவில்லை
பிண்டஞ் சுருங்கிற் பிராணன் நிலைபெறும்
உண்டி சுருங்கில் உபாயம் பலஉள
கண்டங் கறுத்த கபாலியு மாமே. 735

அண்டம் என்பது விதை என்று பொருள். இங்கு விதையாகிய சுக்கிலத்தை வெளிப்படுத்தும் ஆண்குறிக்கு ஆகுபெயராயிற்று. விளக்குத் தண்டு என்றாற் போல. ஆண் குறிக்கும் மேல்துருவத்திற்கும் நேரான சம்பந்தமுடையது. கீழ்த் துருவத்தின் தொழில் பிரஜா விருத்தியும் காமக் கலவியும். மேல் துவாரம் பிறப்பை மாற்றுவது. மேலே மனம் பதிவுண்டபோது ஆண்குறி சோர்ந்து எழுச்சியை இழந்து விடும். அதனால் மனிதன் இறந்துவிடவுமாட்டான். எந்த ஒரு சக்தி காமத்தில் இதை ஈடுபடுத்தினாளோ அந்தச் சக்தியே பக்குவமானபோது மேல்துருவத்தின் ஒளியாகவும் நாதமாகவும் விளங்குகின்றாள்.





கீழ்நிலை மாற்றம் காரணமாக மிகுந்த உணவு உட்கொள்ளும் நிலையையும் மாற்றிவிடும். தேவைக்கேற்ப உணவு உட்கொள்ளலாம். கோரக்கர் '' போசனமும் குறைந்துவிடும். பொன்போல மேனியதும் ஆய்விடும் ' என்றார். யோகிக்கு ஒருபொழுது என்றும் கூறியுள்ளார்கள். சத்துள்ள உணவாகச் சிறிதாகக் கொள்ளவேண்டியது என்பதைக் கூறியுள்ளார். இப்படி ஆகாரம் சுருங்குவதனால் உடலில் உள்ள கொழுப்புச் சத்தும் குறைந்துவிடும். கொழுப்புச் சத்து இல்லாமல் உடல் லாவகமாய் பருமன் இன்றி விளங்கும். இருதய நோய் உள்ளவர்கள்கூட நோயினின்றும் விடுபடுகின்றனர். அல்லல் தரும் புளி உறைப்பு அதிகம் கூடாது. எந்த வித லாகிரியும் கூடாது. புலால் பழைய சோறு தள்ள வேண்டும். இவ்விதமான நெறியைக் கைக்கொள்ளில் நீலகண்டப் பெருமானாகவே ஆய்விடுவாய் என்றார்.

ஆண்குறி சோர்வடைவதை பிர்மச்சிரச்சேதம் என்றும் எழுச்சி அற்றுப்போவதை பிரமனின் இரத்தத்தைப் பானம் செய்ததாகவும் புராணம் கூறுவது என்பதை இரண்டாம் தந்திரத்தில் விளக்கியுள்ளார்.

எங்கும் பரந்தும் இருநிலந் தாங்கியுந்
தங்கும் படித்தவன் தாளுணர் தேவர்கள்
பொங்கும் சினத்துள் அயன்தலை முன்னற
அங்(கு) அச் சுதனை உதிரங்கொண் டானே. 341

### நீலகண்டப் பெருமான்

நீலநிறை நேரிழையான பராசக்தியை முன்மந்திரத்தில் கூறினார். இங்கு நீலகண்டப் பெருமானைக் கூறுகிறார். சதாசிவத் திருமேனி பால் போன்றது. நீல நிறம் சிரசில் மனம்

பதிவுறும்வரையில் நிற்கும். சிரசின்மேலே போகப்போக நீல நிற ஒளியே வெண்மை கலந்ததாய் வெண்மையாக மாறி விடும். கண்டத்தில் விடகலே யென்றதும் மகாரம் என்றதும் மாயை யென்பதும் நின்றுவிடும். இதைச் சாதகன் காண்பதிஞல் சாதகனும் நீலகண்டப் பெருமாஞகின்ருன். இதன்மேல் ஊர்த்துவகாமினி அமைந்து வியாபினி, வியோம ரூபை, அனந்தை, அநாதை, அநாகிருதை. சமலே, உன்மனி ஆகிய கலேகளில் பொருந்தி சாதகன் சிவரூபம் பெறுகிருன். தன்னேயே ஒரு ஒளி வடிவினஞகக் காணும்போது உடலே யில்லாத சிவமாகவே ஆகின்ருன்.

## 13. நற்காயம் பெறவழி

பிண்டத்துள் உற்ற பிழக்கடை வாசலே
அண்டத்துள் உற்று அடுத்தடுத் தேகிடின்
வண்டிச் சிக்கும் மலர்க்குழல் மாதரார்
கண்டிச் சிக்கும்நற் காயமு மாமே.

பிண்டம் என்பது கருவிடும் இடம். பிழக்கடை என்பது கடைகோடியான மூலாதாரச் சக்கரம். இவை இரண்டும் சேர்ந்தது கீழ்த்துருவம். இந்தத் துருவத்தை அடிக்கடி மாற்றி மேனேக்கும்படி செய்தால், வண்டுகளால் சூழப்பட்ட நல்ல மணமுடைய பூக்களே அணிந்துள்ள மாதர் விரும்பும் மன்மத வடிவையும்கூடப் . பெறுவாய் என்ருர். மேலேய் மந்திரங்களில் இறவாமையையும் சிவரூபத்தையும் கூறினவர் எடுத்த உடம்பும் அழகுடைய திருமேனியாகவும் மாறும் என்பதை விளக்கினர். கீழிருந்து மேலேற்றுவது என்பது கீழே காம வாயுவாக இருந்து காமநீக்கம் செய்த காமவாயுவை மேலேற்றுதல்.



முக்கு ணம்புல ஊேந்துட னடக்கி
மூல் வாயுவை யடைத்திரு விழியைச்
சிக்கெ னும்படி யடைத்தொரு வழியைத்
திறந்து தாண்டவச் சிலம்பொலி யுடன் போய்த்
தக்க வைந்தெழுத் தோரெழுத் துருவாந்
தன்மை கண்டவர் தரும்பெருவெளிக்கே
புக்க முந்தின ரெமதுருப் பெறுவர்
புவியில் வேட்டுவ னெடுத்த மணபுழுப்போல்.

## 14. சிவயோகத்தால் எய்தும் பலன்

சுழலும் பெருங்கூற்றுத் தொல்லைமுன் சீறி
அழலும் இரத்தத்துள் அங்கியுள் ஈசன்
கழல்கொள் திருவடி காண்குறில் ஆங்கே
நிழலுளும் தெற்றுளும் நிற்றலு மாமே. 737

சக்கரம் உருண்டோடுவதுபோல் காலம் விரைவில் உருண்டோடிவிடும். அத்தகைய கால சக்கரத்தை உருட்டிக் கொண்டிருப்பவன் எமன். அக்கினி மண்டபத்தில் சுக்கிலம் காமவாயுவால் காமாக்கினியால் கட்டுப்படாமல் ஓடிவிடுவதை, சிலம்பொலியுடன் கூடிய திருவடியைக் கண்டவர்க்கு மூலாதாரத்திலுள்ள அதோமுகமுடைய சிவன், மேலாந் துருவத்தில் வெளிப்படுவர். அப்படி வெளிப்படுபவரைக் கண்டால் எமனே அவர் கோபித்து பக்தனே எமனுடைய காலச் சக்கரப் பிடியிலிருந்தும் காப்பாற்றி விடுவார். பக்தன் இந்தப் பிரபஞ்சத்திலும் மேலுலகத்திலும் வாழலாம்.

நிழலுள் என்பது காமமண்டல வாசம். கனவில் நாம் காண்பது சரியாரூபமாகி உண்மைபோல் காண்கிறது. ஆன்மாவின் நிலே புத்தி மண்டலம்தான். உண்மை காம மண்டலம் உணர்ச்சியில் பொருந்தியது. இந்த பக்தனிடம் கீழ்

உணர்ச்சிகள் ஜயிக்கப்பட்டபடியால் காமமண்டல சஞ்சாரத்தாலும் பாதிக்கமாட்டான்.

மணிவாசகரும் '' நிழல் தருநீரின் இன்சுவை நிகழ்ந்தோன் '' என்று கூறுகிறர்.

தெற்றுளும்-சித்திரக்கூடத்திலும் என்பது பொருள். சித்திரக்கூடத்தில் என்பது சகஸ்ரதளகமலம் பலவித வர்ண ஜாலங்களோடு கூடியது. இந்த இரண்டும் இரு நிலைகள். நிழலுள் என்பது புருடனின் வாசம். தெற்றுளும் என்பது மேல்துருவம். புருடன் என்ருல் தேகத்தையுடையவன். தேகத்தோடு வாழலாம். ஆகாய மண்டலத்தில் எங்கும் செல்லும் ஆற்றலுடனும் வாழலாம் என்பது பொருள்.

'' மேனிற்கும் யோகிக்கு விந்துவும் நாதமும் '' 2135

யோகியின் உடல் அழியாது ; இருக்க உடலைப் பற்றியுள்ள புருடனும் உள்ளான். ஞானம் குறையாதிருக்க விந்துநாதம் பொருந்திய சாதாக்கிய மண்டலவாசிகளான அணு சதாசிவம் போன்று வாழக்கூடியவன். சாதாக்கிய மண்டலவாசிகள் அழியாப் பதவியிலுள்ளவர்கள்.

## 15. ஆன்ம வளர்ச்சி

நான்கண்ட வன்னியும் நாலு கலையேழுந்
தான்கண்ட வாயுச் சரீர முழுதொடும்
ஊன்கண்டு கொண்ட வுணர்வு மருந்தாக
மான்கன்று நின்று வளர்கின்ற வாறே 738

நான் தரிசித்த அக்கினி வடிவமான சிவம் சோம சூரியாக்கினி, தாரகை என்ற தலைகளிலும் ஏழு ஆதாரங்களிலும் (ஆருதாரங்களும் சகஸ்ரதளமும் சேர்ந்து) பிராணனிலும்



பொருந்தி சரீர முற்றிலும் பரவி உணர்வு பெருகி ஆத்மதத்துவம் நின்று வளர்கின்றதாக உள்ளது இங்கு உணர்த்தப்பட்டது. உசுவாச நிசுவாச ரூபமான பிராணனல்லன். இங்குக் கூறிய பிராணன் சிரசில் உண்ணுக்குக்குமேல் பிரதேசத்தில் நான்கு விரற்கடை அளவில் சிரசில் சுழன்று அதன்மேலும் செல்லுவது. இது சிவசக்தி சேர்க்கை என்னும் இடமாகும். மேலே சென்று சாதகனை பிரபஞ்சத்தை மறக்கச் செய்து விடும் தகைமையது.

இருந்தனள் ஏந்திழை என்றுள்ள மேவிப்
பொருந்திய நால்விரல் புக்கனள் புல்லித்
திருந்திய தாணுவிற் சேர்ந்துடன் ஒன்றி
அருந்தவ மெய்தினள் ஆதியி ஞளே. 1113

இந்த நால்விரற்கடை வளரவேண்டியது சதாசிவப் பிரதேசம்.

நன்கு தெரியவேண்டில் இதுபற்றி, கோயிற்றிருவிருத்தம் செத்திலாப் பத்து பார்த்தறிக.

மான்கன்று என்பது ஆத்துமதத்துவம்

### உணர்வு

ஊனுடம்பில் சாதகன் சிவத்தை நினைத்தபோது ஒரு இன்பப் பரிசம் உண்டாகி சிரசை நோக்கிப் பாய்ந்து அங்கு இடங்கொள்ளும். சாதகன் நினைவு நிற்கும் வரையில் அந்த இன்ப உணர்வும் நிற்கும். சாதகன் அதைக் கவனியாது புறநிலையில் மனம் சென்ருல் அது கீழே அதன் இடமான மூலாதாரத்திற்கு இறங்கிவிடும். இந்த உணர்வுதான் சாதகனுக்கு அமிர்தம் போன்று உபகரிப்பது. அது உடலில் ஸ்பரிச

உணர்வை உண்டாக்குவதால் இதைப் பரிசயோகம் என்றும் கூறுவர். நினைக்கு முன்மேனேக்கிப் பாயும் ஆற்றல் உடையது. இந்தப் பரிச இன்பத்தில் நினைவுகொண்டு நின்றால் புற உலகம் மறந்து விடுகிறது. இன்பம், தவிர வேறு ஓர் எண்ணமும் உதியாது. நினைக்கவும் முடியாது. எண்ணம் உதித்தால் இன்பம் நழுவிவிடும்.

நான்பெற்ற இன்பம் பெறுகஇவ் வையகம்
வான்பற்றி நின்ற மறைப்பொருள் சொல்லிடின்
ஊன்பற்றி நின்ற உணர்வுறு மந்திரம்
தான்பற்றப் பற்றத் தலைப்படுந் தானே.

எட்டுக்கொண் டார்தமைத்
தொட்டுக்கொண் டேநின்றார்
விட்டா ருலகமென் றுந்திபற
வீடேவீ டாகுமென் றுந்திபற.

உள்ளும் புறம்பு நினைப்பறி வின்னுள்ளே
மொள்ள வமுதாமென் றுந்திபற
முளையாது பந்தமென் றுந்திபற.

பேரின்ப மான பிரமக் கிழத்தியோ
டோரின்பத் துள்ளானென் றுந்திபற்
உன்னையே யாண்டதென் றுந்திபற.

சிந்தையி னுள்ளுமென் சென்னியி னுஞ்சேர
வந்தவர் வாழ்கவென் றுந்திபற
மடவா ளுடனேயென் றுந்திபற

கருதுவ தன்முன் கருத்தழி யப்பாயு
மொருமகள் கேள்வனென் றுந்திபற
உன்ன வரியனென் றுந்திபற.



திருவாசகம், திருமந்திரம், திருஉந்தியார், சித்தர் நூல் எல்லாம் கூறுவது இந்த உணர்வேதான்.

மாய வாழ்க்கையை மெய்யென் றெண்ணி
மதித்திடா வகைநல்கினன்
வேய தோளுமை பங்கன் எங்கள்
திருப்பெ ருந்துறை மேவினன்
**காயத் துள்ளமு தூற வூறநீ**
**கண்டு கொள்**ளென்று காட்டிய
சேய மாமலர்ச் சேவ டிக்கண்நம்
சென்னி மன்னித் திகழுமே.

மான் கன்று-என்றது உடல் வாலிபத் தோற்றத்தோடு கூடி நிற்கும் என்பதை கன்று என்ற சொல்லால் உணர்த்தி உள்ளார்.

## 16. ஆன்மபரிசுத்தம் ஆகுமுறைமை

ஆகுஞ் சனவேத சத்தியை அன்புற
நீகொள்ளின் நெல்லின் வளர்கின்ற நேர்மையைப்
பாகு படுத்திப் பல்கோடி களத்தினுல்
ஊழ்கொண்ட மந்திரந் தன்னுல் ஒடுங்கே. 739

ஊழ் கொண்ட மந்திரம் பிரணவம். ஆகுஞ்சனம். — பத்மாதனத்தில் அமர்ந்து இரண்டு கைகளையும் மடியில் நிமிர்ந்த முறையில் ஒன்றின் மேல் பொருந்தும்படியாக வைத்து குதவாயிலை மேலேற்றி நிற்றல். இந்த முறையில் இருந்தால்தோள்விரிந்தும் மூலாதாரம் சுருக்கப்பட்டும் நிற்கும் பழக்கத்தினால் சுழுமுனை திறந்து மேலேற எளிதாக இருக்கும்.

வேத சக்தி.—மாற்றத்தை உண்டாக்கும் சத்தி.

களம்.—போர்க் களம். இங்கு இருளுக்கும் ஒளிக்கும் போர்.

பிரணவ யோகத்தில் நின்று ஆகுஞ்சன வேத சத்தியைக் கொண்டு அன்புடன் பயிலுவாயாக. ஒரு நெல் சாகுபடி செய்வதில் எப்படி பல நெற்களை உற்பத்தி செய்து விதைப் பண்டமும் உணவுப் பண்டமுமாக தயாரித்துக் கொள்ள முடிகிறதோ அதுபோல இருளுக்கும் ஒளிக்கும் நடக்கும் போரில் இருள் கீழ்ப்படுத்தப்பட்டு ஒளி சேமிப்பு உண்டாய், ஒளி உடல் அமைந்துவிடும். பல கோடிகளம் என்பது அளவற்ற தடவை பயிற்சி வேண்டும் என்றபடி.

" **கரமலர் மொட்டித்** திருதய மலரக்
கண்களி கூர நுண்துளி யரும்பச்
சாயா அன்பினை நாடொறும் தழைப்பவர்
தாயே யாகி வளர்த்தனை போற்றி "

கரம் என்றது துதிக்கை என்னும் பொருளையுடையது. துதிக்கை என்பது கழுமுனை நாடியாகும்.

கரமுகன் என்று பிரணவக் கடவுளாகிய விநாயகருக்குப் பெயர்.

திருவாசகம் கோயில் திருப்பதிகம் படித்து அநுபோக இலக்கணம் உணர்க.

இத்தகையயோகத்தை முப்பது வயதுக்குள்பெற்று சாதனை பெறுவோர் பதினைந்து ஆண்டில் சித்தி பெறுவர். 45 வயதுக்குள் பெறுபவர் இருபத்தைந்து வருஷத்தில் சித்தி பெறுவர். 55 வயதிற்குள் பெறுபவர் 30 அல்லது 35 வருஷங்களில் சித்தி பெறுவர். 55 வயதுக்குமேல் உள்ளவர்க்குச் சொல்லிக்கொடுக்க வேண்டியதில்லை என்று சித்தர்



நூல் கூறுகிறது. வயதின் தகுதிக் கேற்ப கூடுதலாகவோ குறைவாகவோ மாற்றம் அமைகிறது என்பது உண்மையான விஷயம்.

பதினெண் சித்தர் ஞானக் கோவையில் உள்ளது.

**அகஸ்தியர் ஞானம்** **2 செய்யுள்கள்**

மனமது செம்மையானல் மந்திரஞ் செபிக்க வேண்டா
மனமது செம்மையானல் வாயுவை யுயர்த்த வேண்டா
மனமது செம்மையானல் வாசியை நிறுத்தவேண்டா
மனமது செம்மையானல் மந்திரஞ் செம்மையாமே.

**உயர் ஞானம்**

உண்ணும்போ துயிரெழுத்தை யுயர வாங்கி
உறங்குகின்ற போதெல்லா மதுவே யாகும்
பெண்ணின்பா விந்திரியம் விடும்போ தெல்லாம்
பேணிவலம் மேல் நோக்கி அவத்தில் நில்லு
திண்ணுங்கா யிலைமருந்து மதுவே யாகும்
தினந்தோறும் மப்படியே செலுத்த வல்லார்
மண்ணூழி கால மட்டும் வாழ்வார் பாரு
மறலிகையில் அகப்பட மாட்டார் தாமே.

**தனி ஞானம்** **3 செய்யுள்கள்**

ஒன்ரன உச்சிவெளி தாண்டி நின்று
உமையவளுங் கணபதியு முந்தி யாகி
விண்ணொளியாம் அம்பரம்லும் அவ்வும் உவ்வும்
விதித்தபரம் ஒருவருக்கு மெட்டா தப்பா
பண்ணன உன்னுயிர்தான் சிவம தாச்சு
பாற்கடலில் பள்ளிகொண்டோன் விண்டு வாச்சு

கண்ணுன கணபதியைக் கண்ணில் கண்டால்
கலந்துருகி யாடுதடா ஞானம் முற்றே !

விந்துநிலே தனையறிந்து விந்தைக் கண்டால்
விதமான நாதமது குருவாய்ப் போகும்
அந்தமுள்ள நாதமது குருவாய்ப் போனுல்
ஆதியந்த மானகுரு நீயே யாவாய்
சந்தேக மில்லையடா புலத்தியனே
சகலகலே ஞானமெல்லா மிதற்கொவ் வாவே.
முந்தா நாள் இருவருமே கூடிச் சேர்ந்த
மூலமதை யறியாட்டால் மூலம் பாரே. 2

மூலமதை யறிந்தக்கால் யோக மாச்சு
முறைமையுடன் கண்டக்கால் வாத மாச்சு
சாலமுடன் கண்டவர்முன் வசமாய் நிற்பார்
சாத்திரத்தைச் சுட்டெரித்தா லவனே சித்தன்
சீலமுள்ள புலத்தியனே பரம யோகி
செப்புமொழி தவருமல் உப்பைக் கண்டால்
ஞாலமுள்ள எந்திரமாம் சோதி தன்னை
நாட்டினல் சகலசித்தும் நல்கும்-முற்றே. 3

---

## பெருமன்றம் வெளியிட்டுள்ள அடக்கவிலை நூல்களின் விலைப் பட்டியல்

| | | |
|---|---|---|
| 1. | சிவாலய வழிபாட்டுப் பாடல் திரட்டு | 2.50 |
| 2. | கூட்டு வழிபாட்டுப் பாமாலை | 2.50 |
| 3. | கால காலர் திருமுறை | 1.75 |
| 4. | பண்பயிற்சிப் பாடல் திரட்டு | 2.00 |
| 5. | மழை வேண்டல் பதிகம் | 1.25 |
| 6. | சிவலிங்க பூசை | 1.00 |
| 7. | திருவொற்றியூர்த் தியாகராசர் திருக்கோயில் | 3.00 |
| 8. | சிவபெருமான் திருமும்மணிக்கோவை உரையுடன் | 5.00 |
| 9. | நால்வர் அம்மானை | 1.00 |
| 10. | பெரு விண்ணப்பம் | 0.25 |
| 11. | நீதிப் பாடற் கொத்து | 0.60 |
| 12. | மகா மகப் பெருவிழா மலர் | 7.00 |
| 13. | ஞானியார் அடிகள் நினைவு மலர் | 16.00 |
| 14. | திருமுறைத் திருமணம் செய்முறை விளக்கத்துடன் | 8.00 |
| 15. | மூன்றாம் திருமுறைத் திரட்டு | 0.75 |
| 16. | சுந்தரர் தேவாரம் (ஏழாம் திருமுறை) | 20.00 |
| 17. | திருப்புகழில் சைவ சித்தாந்தம் | 1.00 |
| 18. | திரு வி.க வின் சிவஞான பாடிய அணிந்துரை | 0.50 |
| 19. | சிவ ஞான போதம் – JMN ஆங்கில மொழிபெயர்ப்பு | 1.00 |
| 20. | காய சித்தி | 4.00 |
| 21. | முப்பொருள் இயல்பு | 6.00 |
| 22. | சிவஞான போதச் சிற்றுரை விளக்கம் | 50.00 |
| 23. | மெய் கண்ட சாத்திரங்கள் உரையுடன் | 70.00 |
| 24. | சந்தானாச்சாரியர் வரலாறு | 1.25 |
| 25. | துகளறு போதம் | 20.00 |
| 26. | வள்ளலாரின் உத்தரஞான சிதம்பரம் | 20.00 |
| 27. | சைவ சித்தாந்தமும் சமரச சுத்த சன்மார்க்கமும் | 6.00 |
| 28. | வள்ளலார் கண்ட அருளாளர் அறுவர் | 5.00 |
| 29. | சிவஞான மாபாடியம் | 60.00 |
| 30. | சைவ சமயக் கையேடு | 30.00 |
| 31. | சிவஞான போதம் தமிழ் முதல் நூலே | 7.00 |

நூல்களைப் பெருமன்ற அலுவலகத்தில் நேரிலும் அஞ்சல் மூலமும் பெறலாம். அஞ்சல் மூலம் நூல்களைப் பெற விரும்பும் அன்பர்கள் நூல் விலையுடன் அஞ்சல் செலவையும் சேர்த்துப் பணத்தை அனுப்பினால் நூல்கள் அஞ்சலில் அனுப்பி வைக்கப்படும். வி.பி.பி. மூலம் நூல்களை அனுப்ப இயலாது.